'சேப்பியன்ஸ்' நூலாசிரியரிடமிருந்து மற்றொரு வெற்றிப் படைப்பு!

யுவால் நோவா ஹராரி



# 21 ஆம் நூற்றாண்டுக்கான 21 பாடங்கள்

தமிழில்: நாகலட்சுமி சண்முகம்

TAMIL EDITION

# 21 ஆம் நூற்றாண்டுக்கான 21 பாடங்கள்

யுவால் நோவா ஹராரி

தமிழில்:
நாகலட்சுமி சண்முகம்




மஞ்சுள் பப்ளிஷிங் ஹவுஸ்

## பாராட்டு மழையில்!

“ஹராரி எழுதியுள்ள அனைத்தின் தீவிர இரசிகன் நான். அவருடைய சமீபத்திய நூல் இதற்கு விதிவிலக்கல்ல.”

**- பில் கேட்ஸ்,**

**‘2018ல் நான் விரும்பிய ஐந்து நூல்கள்’ கட்டுரையிலிருந்து**

“ஹராரியின் சிந்தனைத் தெளிவு என்னைப் பெரிதும் கவர்கிறது.”

**- ஜாக் டார்ஸி,**

**டுவிட்டரின் முதன்மை நிர்வாக அதிகாரி**

“செயற்கை நுண்ணறிவு மற்றும் உயிர்தொழில்நுட்பம் குறித்து ஹராரி தன்னுடைய புதிய நூலில் குறிப்பிட்டுள்ள கருத்துகள் இனி அரங்கேறவிருக்கும் நாடகங்களைப் பற்றிய நம்முடைய புரிதலைத் தீவிரமாக்கும்.”

**- ரீட் ஹேஸ்டிங்ஸ்,**

**நெட்ஃபிளிக்ஸ் துணை நிறுவனர்**

“நம்முடைய காலகட்டத்தின் மாபெரும் சிந்தனையாளர்.”

**- ‘த டைம்ஸ்’ பத்திரிகை**

“விலை மதிப்பிடப்பட முடியாத பல சிந்தனை முத்துகள் இந்நூலில் உள்ளடங்கியுள்ளன. இது ஆர்வத்தைத் தட்டியெழுப்புகிறது, எதிர்காலத்திற்குள் சுவாரசியமாக ஊடுருவிப் பார்க்கிறது.”

**- ‘த எக்கானமிஸ்ட்’ பத்திரிகை**

“இந்நூல் உண்மையிலேயே மனத்தை விரிவுபடுத்துவதாகவும், தற்போது நிகழ்ந்து கொண்டிருக்கின்ற விஷயங்களைப் பற்றியதாகவும் இருக்கிறது. ஹராரியின் படைப்பின் வீச்சு ஆழமானதாகவும் அகலமானதாகவும் இருக்கிறது.”

**- ‘த கார்டியன்’ பத்திரிகை**

“பண்டைய வரலாற்றில் தொடங்கி, நரம்பு அறிவியல், தத்துவம், செயற்கை நுண்ணறிவு ஆகியவைவரை பல்வேறு துறைகளிலிருந்து உள்நோக்குகளை ஒன்றாகக் கோர்ப்பதில் ஹராரிக்கு இருக்கின்ற திறன், நாம் எங்கிருந்து வந்துள்ளோம் என்பதையும் நாம் எங்கே போய்க்

கொண்டிருக்கிறோம் என்பதையும் பற்றிப் புரிந்து கொள்வதற்கான ஆரவாரத்திற்குச் செயல்விடை அளிக்க அவருக்கு உதவியுள்ளது. இந்நூல் அறிவுக்குத் தீனி போடுகின்ற சாகசமாகவும் இலக்கியத் தரம் வாய்ந்ததாகவும் உள்ளது.”

**- ‘பைனான்சியல் டைம்ஸ்’ பத்திரிகை**

“ஹராரி தன்னுடைய இப்புதிய, சுவாரசியமான நூலில், நம்முடைய பயங்களை எதிர்கொள்வதற்கான ஒரு பயனுள்ள கட்டமைப்பை உருவாக்குகிறார். அவருடைய சில கருத்துகளோடு நான் உடன்படாதபோதுகூட, அவருடைய நூலைத் தொடர்ந்து படிக்கவும் அது குறித்துச் சிந்திக்கவும் நான் விரும்புகின்ற அளவுக்கு நம்மை உந்தித் தள்ளுகின்ற ஓர் எழுத்தாளராக ஹராரி விளங்குகிறார். இருபத்தொன்றாம் நூற்றாண்டின் பிரச்சனைகளை எவ்வாறு கையாள்வது என்பது பற்றிய ஒரு முக்கியமான உலகளாவிய உரையாடலை அவர் தொடங்கி வைத்திருக்கிறார்.”

**- பில் கேட்ஸ்,**

**‘த நியூ யார்க் டைம்ஸ் புத்தக விமர்சனம்’**

“நவீன வாழ்க்கை நம்மைத் திக்குமுக்காடச் செய்வதுபோலத் தோன்றக்கூடும். ஹராரியின் இப்புதிய நூல், நவீன வாழ்க்கையின் ஊடாக நம்மை வழிநடத்திச் செல்ல நம் கையில் தயாராக இருக்கிறது.”

**- ‘எல்’ பத்திரிகை, பிரிட்டன்**

“இந்த நூற்றாண்டில் நாம் அனைவரும் ஏற்கனவே எதிர்கொண்டுள்ள, கடினமாகக் கற்றுக் கொண்ட பாடங்களை வெளிப்படுத்துவதுதான் ஹராரியின் நோக்கம். அவருடைய தத்துவரீதியான ஆய்வின் வசீகரத்தையும் அவருடைய எழுத்தின் சுவாரசியத்தையும் மறுப்பது கடினம்.”

**- ‘எஸ்கொயர்’ பத்திரிகை, பிரிட்டன்**

“அரசியல்வாதிகளும் சிந்தனைத் தலைவர்களும் கண்டிப்பாக வைத்திருக்க வேண்டிய அறிவுறுத்தல் கையேடு என்று ஒன்று இருந்திருந்தால், இஸ்ரேலிய வரலாற்றியலாளரான யுவால் நோவா ஹராரியின் இப்புத்தகம் அத்தகைய ஒன்றாகப் பார்க்கப்படத் தகுதி வாய்ந்தது.”

**- ‘புக்பேஜ்’**

“குழப்பமூட்டுகின்ற புதிய நிகழ்வுகள் குறித்த ஓர் அறிவார்ந்த, நடைமுறைக் கண்ணோட்டம்.”

- **‘புக்லிஸ்ட்’**

“வரலாற்றுக் கண்ணோட்டம், அறிவியல் கண்ணோட்டம், அரசியல் கண்ணோட்டம், தத்துவக் கண்ணோட்டம் ஆகியவற்றை அற்புதமாக ஒருங்கிணைத்து, இன்றைய ‘மாபெரும் சவால்களாக’த் தான் கருதுகின்ற இருபத்தொரு சவால்களை ஹராரி இந்நூலில் ஆய்வு செய்கிறார். இப்புத்தகத்தின் தலைப்பில் ‘பாடங்கள்’ என்று குறிப்பிடப்பட்டிருந்தாலும்கூட, ஹராரியின் தொனி அறிவுறுத்துவதுபோல அல்லாமல் ஆய்வு செய்வதாகவே இருக்கிறது, திட்டவட்டமான தீர்வுகளை வழங்காமல் வெறுமனே விவாதத்தைத் தூண்டுகின்ற வகையில் இருக்கிறது. இந்தப் பரந்த கட்டமைப்பிற்குள், தாராளவாத ஜனநாயகம், தேசியவாதம், குடியேற்றம், மதம் போன்ற பல தீவிரப் பிரச்சனைகளைப் பற்றி விபரமாக அவர் எடுத்துரைக்கிறார். அளப்பரிய தகவல்களை உள்ளடக்கிய இந்நூல், எல்லோரும் இரசித்து அனுபவித்துப் பரவலாக விவாதிக்க வேண்டிய ஒன்று.”

- **‘பப்ளிஷர்ஸ் வீக்லி’**

“சேப்பியன்ஸையும் ஹோமோ டியஸையும்விட எளிதாகப் புரிந்து கொள்ளப்படக்கூடிய இந்நூல், உங்களுக்கு ஏற்கனவே தெரியும் என்று நீங்கள் நினைத்த விஷயங்களை ஒரு புதிய கண்ணோட்டத்தில் எடுத்துரைக்கிறது. ஹராரியின் படைப்பு உற்சாகமூட்டுவதாக இருக்கிறது.”

- **‘ரேடியோ டைம்ஸ்’ பத்திரிகை, பிரிட்டன்**

“தற்போதைய பிரச்சனைகளையும் மனிதச் சமுதாயங்களின் உடனடி எதிர்காலத்தையும் மிக விரிவாக ஆய்வு செய்து அறிவுறுத்துகின்ற ஒரு நூல் இது. டிரம்ப்பில் தொடங்கி, தீவிரவாதம், பிரெக்சிட், பெருந்தரவு போன்றவைவரை இன்று நாம் எதிர்கொண்டுள்ள பல்வேறுபட்டப் பிரச்சனைகள் குறித்த அற்புதமான உள்நோக்குகளை வழங்குகின்ற ஹராரி, தன்னுடைய மேதமையை மீண்டும் நிரூபித்திருக்கிறார். இந்நூலில் இடம் பெற்றுள்ள, தற்போதைய சூழ்நிலையைத் துல்லியமாக ஆய்வு செய்கின்ற 21 கட்டுரைகளில், ‘உண்மைக்குப் பிந்தைய காலகட்டத்திய’ உலகம் நம்மை எங்கே அழைத்துச் சென்று கொண்டிருக்கிறது என்பது குறித்து ஹராரி தன்னுடைய

கண்ணோட்டத்தை வழங்குகிறார். அவருடைய விவரிப்பு இரசிக்கத்தக்க வகையில் நியாயமானதாக இருப்பதைப் பெரும்பாலான வாசகர்கள் உணர்ந்து கொள்வர். கொடுங்கோலர்களையும் தேசியவாதிகளையும் ஜனரஞ்சகவாதிகளையும் தேர்ந்தெடுக்கின்றவர்களுடைய கதைகள் (உண்மையானவை அல்ல, ஆனால் அறிவார்ந்தவை) குறித்த அவருடைய விளக்கமும் இதில் அடங்கும். பெரும் சீர்குலைவை ஏற்படுத்துகின்ற தொழில்நுட்பத்திற்கும் (உயிர்தொழில்நுட்பம், தகவல் தொழில்நுட்பம்) அதன் பின்விளைவுகளுக்கும் (பருவநிலை மாற்றம், பெரிய அளவில் வேலையில்லாமை) அவர் வழங்குகின்ற தீர்வுகள் உண்மைபோலத்தான் தோன்றுகின்றன. ஆனால் அவை பலனளிக்க வேண்டுமென்றால், நாடுகள் கடந்தகாலத்தில் நடந்து கொண்டதைவிட அதிக அறிவார்ந்த முறையில் இப்போது நடந்து கொள்ள வேண்டும். ஹராரி மற்றொரு சுவாரசியமான பயணத்திற்குள் நம்மைக் கூட்டிச் செல்கிறார்."

**- 'கிர்கஸ் பரிசீலனைகள்' பத்திரிகை**

"மக்களை ஒருங்கிணைத்து, அவர்கள் ஒரு விவாதத்தில் ஈடுபடும்படி செய்வதற்கான திறன் இப்புத்தகத்திற்கு இருக்கிறது. இதுதான் ஹராரியின் பங்களிப்பு."

**- ஃபீ ஃபீ லீ,**

**ஸ்டான்போர்டு செயற்கை நுண்ணறிவுப் பரிசோதனைக்கூடம்**

"ஹராரி தன்னுடைய வாசகர்களுக்கு ஒரு சாகச உணர்வைக் கொடுக்கிறார். ஏனெனில், பெரிய பெரிய விஷயங்களையெல்லாம் அளப்பரிய தன்னம்பிக்கையோடும் உற்சாகத்தைத் தூண்டும் விதத்திலும் அவர் விவாதிக்கிறார். அவர் கையாள்கின்ற விஷயங்களோடு ஒப்பிட்டால், நாம் படிக்கக்கூடிய மற்ற அனைத்து விஷயங்களும் பிதற்றல்கள்போலவும் சுவாரசியமற்றவைபோலவும் தோன்றுகின்றன."

**- 'ஈவினிங் ஸ்டான்டர்டு' பத்திரிகை, பிரிட்டன்**

"ஆர்வத்தைத் தூண்டும் ஒரு வாசிப்பு."

**- 'ஜூயிஷ் கிரானிக்கிள்', பிரிட்டன்**

"நாம் இப்போது எங்கே இருக்கிறோம், நாம் எங்கே போய்க் கொண்டிருக்கக்கூடும் என்பது பற்றிய ஒரு சுவாரசியமான முன்னோட்டம் இது. உலகத்தைப் படம்பிடிப்பதில் ஹராரி

கைதேர்ந்தவர். மிகத் தெளிவாக எழுதப்பட்டுள்ள இந்நூல் எல்லோரும் கண்டிப்பாகப் படிக்க வேண்டிய ஒன்று."

**- 'ஆர்ட்ஸ் டெஸ்க்' வலைத்தளம்**

"அறிவார்ந்த, தெளிவான, வீண் ஆரவாரம் இல்லாத ஒரு நூல் இது."

**- 'டிசைன்கியூரியல்', பிரிட்டன்**

"ஹராரி தன்னுடைய தெளிவான சிந்தனை மூலம் சாதாரண மக்களுக்கு சக்தியளிக்க விரும்புகிறார். அவருடைய நோக்கம் உண்மையிலேயே மெச்சத்தக்கது."

**- பிரிட்டன் பிரெஸ் சின்டிகேஷன்**

"காலத்தின் ஏதோ ஒரு முக்கியக் கணத்தைக் கைப்பற்றிக் கொண்டு இருப்பதைப்போல இந்நூல் அவசரமானதாகவும் தேவையானதாகவும் தோன்றுகிறது. நடவடிக்கை எடுப்பதற்கான ஒரு நேரடி அழைப்பு இது. ஹாராரியின் மூன்று புத்தகங்களில் உண்மையிலேயே மிக அதிகத் தாக்கம் விளைவிக்கின்ற நூல் இதுவாகத்தான் இருக்கும்."

**- 'கல்ச்சர் காலிங்' நிறுவனம், பிரிட்டன்**

"அறிவுத் தெளிவு ஏற்படுத்துகின்ற, அளப்பரிய தகவல்களை உள்ளடக்கிய, விலாவாரியான ஒரு நூல் இது. ஹராரியின் பாடங்கள் தற்போதைய பிரச்சனைகளைப் பற்றிச் சிந்திப்பதற்கான புதிய வழிகளைப் பரிந்துரைக்கின்றன. அப்பிரச்சனைகளை எதிர்கொள்ள நமக்கு விடுக்கப்பட்டுள்ள ஓர் அருமையான, அறிவார்ந்த, நம்மைத் தட்டியெழுப்புகின்ற அழைப்பு இது."

**- 'சன்டே டைம்ஸ்' பத்திரிகை**

"பல்வேறுபட்டத் தலைப்புகளுக்கு இடையே ஹராரி எளிதாகத் தாவுகிறார்."

**- 'அறிவியல்' பத்திரிகை**

"நம்முடைய உலகத்தைப் பற்றி விளக்குவதில் ஹராரியைவிடச் சிறந்த எவரும் நிச்சயமாக உயிரோடு இல்லை. பல்கலைக்கழகத்தில் நமக்கு இவரைப் போன்ற ஒரு பேராசிரியர் வாய்த்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் என்று நினைக்க வைக்கின்ற பேராசிரியர் அவர். நான் இப்புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்த நேரத்தில், இதில் இடம் பெற்றுள்ள பிரமிப்பூட்டும் விஷயங்களையும் சுவாரசியமான தகவல்களையும் உடனுக்குடன் நான் என் வாழ்க்கைத்துணையுடன்

பகிர்ந்து கொண்டதன் மூலம் நான் நூறு முறையாவது அவருக்கு இடையூறு ஏற்படுத்தியிருக்கக்கூடும். சுருக்கமாகக் கூறினால், ஹராரியின் மூன்றாவது படைப்பான இந்நூல் மிக முக்கியமான ஒரு நூலாகும்."

**- ஆடம் கே, நூலாசிரியர்**

"ஹராரியின் ஆழமான பார்வையும் அளவான எழுத்தும் இணைந்து உருவாக்கியுள்ள இப்புத்தகம், நமக்குள் அடங்கிக் கிடக்கும் கவலைகளையும் மாலைநேரச் செய்திகளால் விளைகின்ற தூக்கமின்மையையும் ஓர் ஆழமான, அதிகமாக வலுவூட்டப்பட்டுள்ள புரிதலாக மாற்றுகிறது."

**- 'கல்ச்சர் விஸ்பர்' நிறுவனம், பிரிட்டன்**

"மூளைக்கான கச்சிதமான உணவான இந்நூல், செரிப்பதற்கு எளிதானது, முற்றிலும் ஊக்கமளிக்கிறது."

**- 'குட் ஹவுஸ்கீப்பிங்' நிறுவனம், பிரிட்டன்**

"ஹராரி தன்னுடைய ஆழமான அறிவைப் பயன்படுத்தி, மனிதகுலத்தின் கடந்தகாலம், நிகழ்காலம் மற்றும் எதிர்காலத்தின்மீது வெளிச்சத்தைப் பாய்ச்சுகிறார்."

**- 'ஆர்ட்ஃபோரம்' பத்திரிகை, பிரிட்டன**

## நூலாசிரியர்

***யுவால் நோவா ஹராரி***

உலகப் புகழ் பெற்ற வரலாற்றியலாளரும் தத்துவவியலாளருமான யுவால் நோவா ஹராரி, 1976 ஆம் ஆண்டில் இஸ்ரேலில் ஹைஃபா நகரில் பிறந்தவர். அவர் 2002 ஆம் ஆண்டில் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்திலிருந்து வரலாற்றில் ஒரு முனைவர் பட்டம் பெற்றார். அவர் தற்போது ஜெருசலேம் ஹீப்ரு பல்கலைக்கழகத்தில் ஒரு பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

தொடக்கத்தில் உலக வரலாற்றிலும் இடைக்கால வரலாற்றிலும் இராணுவ வரலாற்றிலும் தனிச்சிறப்புப் பெற்ற அவர், தற்போது பின்வரும் கேள்விகள் குறித்து ஓர் ஆய்வு மேற்கொண்டுள்ளார்: வரலாற்றுக்கும் உயிரியலுக்கும் இடையேயான உறவு என்ன? ஹோமோ சேப்பியன்ஸுக்கும் பிற விலங்குகளுக்கும் இடையேயான முக்கிய வேறுபாடு எது? வரலாற்றில் நியாயம் இருக்கிறதா? வரலாற்றுக்கு ஒரு

திசை இருக்கிறதா? வரலாறு மலர மலர மக்கள் அதிக மகிழ்ச்சியடைந்தனரா? இருபத்தொன்றாம் நூற்றாண்டில் அறிவியலும் தொழில்நுட்பமும் எத்தகைய தார்மீகக் கேள்விகளை எழுப்புகின்றன?

ஹராரி எழுதிய 'சேப்பியன்ஸ்: மனிதகுலத்தின் ஒரு சுருக்கமான வரலாறு', 'ஹோமோ டியஸ்: வருங்காலத்தின் ஒரு சுருக்கமான வரலாறு', '21 ஆம் நூற்றாண்டுக்கான 21 பாடங்கள்' ஆகிய மூன்று நூல்களும் உலகம் நெடுகிலும் சுமார் இரண்டு கோடி எழுபது இலட்சம் பிரதிகள் விற்பனையாகிப் பெரும் சாதனைகளைப் படைத்துள்ளன.

அனைத்துத் தளங்களிலும் நம்மைச் சுற்றி நிகழ்ந்து கொண்டிருக்கின்ற அதிவேக மாற்றங்களின் உடனடி விளைவுகள் மற்றும் நீண்டகால விளைவுகள் குறித்த விவாதங்களையும் கலந்துரையாடல்களையும் தோற்றுவிக்கும் கடமை, ஒரு வரலாற்றியலாளர் என்ற முறையில் தனக்கு இருப்பதாக ஹராரி கூறுகிறார். அவர் அதில் வெற்றி பெற்றுள்ளார் என்பதை அவருடைய நூல்களைப் படிக்கின்ற ஒவ்வொருவரும் ஒப்புக் கொள்வர்.

## <u>மொழிபெயர்ப்பாளர்</u>

***நாகலட்சுமி சண்முகம்***

கடந்த ஒன்பது ஆண்டுகளில் 80க்கும் மேற்பட்ட நூல்களை நாகலட்சுமி மொழிபெயர்த்துள்ளார். இவருடைய மொழிபெயர்ப்புக்குக் கிடைத்துள்ள அங்கீகாரங்களில் 2014ல் திருப்பூர் தமிழ்ச் சங்கம் அளித்த 'தமிழ் மொழிபெயர்ப்புத் துறைக்கான சிறப்பு விருதும்,' இவர் மொழிபெயர்த்த 'இறுதிச் சொற்பொழிவு' நூலுக்கு 2014ல் வழங்கப்பட்ட 'நல்லி திசை எட்டும் மொழியாக்க விருதும்' அடங்கும். 2017 மே மாதம் தமிழக அரசு சிறந்த மொழிபெயர்ப்பாளருக்கான விருதை நாகலட்சுமிக்கு வழங்கி கௌரவித்துள்ளது.

நாகலட்சுமி ஒரு மிகச் சிறந்த ஊக்குவிப்புப் பேச்சாளரும்கூட. அமெரிக்காவின் தலைசிறந்த பேச்சாளர்களில் ஒருவரும், 'சிக்கன் சூப் ஃபார் த சோல்' புத்தக வரிசையை உருவாக்கியவருமான ஜாக் கேன்ஃபீல்டின் 'வெற்றிக் கொள்கைகள்' பயிலரங்கை நடத்துவதற்கு அவரிடம் நேரடியாகப் பயிற்சி பெற்றவர் இவர்.

தமிழ் நாடகத் துறையின் முன்னோடி மேதைகளான டி.கே.எஸ். சகோதரர்களில் ஒருவரான திரு. டி.கே. முத்துசாமி அவர்களின்

பேத்திகளில் ஒருவர் இவர். இவர் தற்போது தன் கணவருடனும் தன் குழந்தைகள் இருவருடனும் மும்பையில் வசித்து வருகிறார்.

மஞ்சுள் பப்ளிஷிங் ஹவுஸ் வெளியிட்டுள்ள
யுவால் நோவா ஹராரியின் பிற படைப்புகள்
**சேப்பியன்ஸ்**
மனிதகுலத்தின் ஒரு சுருக்கமான வரலாறு
**ஹோமோ டியஸ்**
வருங்காலத்தின் ஒரு சுருக்கமான வரலாறு

**உள்ளடக்கம்**

என் கணவர் இட்ஸிக், என் தாய் பினீனா,

என் பாட்டி பேனி ஆகியோரிடமிருந்து

பல ஆண்டுகளாக எனக்குக் கிடைத்து

வந்துள்ள அன்புக்கும் ஆதரவுக்கும்

அவர்களுக்கு இந்நூலை

நான் சமர்ப்பிக்கிறேன்.

## முன்னுரை

பொருத்தமற்றத் தகவல் பெருவெள்ளத்தில் மூழ்கியுள்ள இன்றைய உலகில் தெளிவுதான் சக்தி. கோட்பாட்டுரீதியாகப் பார்க்கும்போது, மனிதகுலத்தின் எதிர்காலத்தைப் பற்றிய விவாதத்தில் எவரொருவராலும் கலந்து கொள்ள முடியும் என்றாலும், ஒரு தெளிவான முன்னோக்கைத் தக்க வைத்துக் கொள்வது கடினமாகவே இருக்கிறது. பல சமயங்களில், ஒரு விவாதம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதையோ அல்லது முக்கியமான கேள்விகள் எவை என்பதையோ நாம் கவனிப்பதுகூட இல்லை. ஆராய்ச்சியில் இறங்குவது நம்மில் கோடிக்கணக்கானோருக்குக் கட்டுப்படியாகாது. ஏனெனில், வேலைக்குப் போவது, நம்முடைய குழந்தைகளை கவனித்துக் கொள்வது, வயதான பெற்றோரை கவனித்துக் கொள்வது போன்ற, நாம் கட்டாயம் செய்தாக வேண்டிய ஏகப்பட்ட விஷயங்கள் நமக்கு இருக்கின்றன. துரதிர்ஷ்டவசமாக, வரலாறு நமக்குச் சிறப்புத் தள்ளுபடிகள் எதையும் கொடுப்பதில்லை. உங்களைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாமலேயே மனிதகுலத்தின் எதிர்காலம் தீர்மானிக்கப்படுகிறது என்றால், நீங்கள் உங்கள் குழந்தைகளுக்கு உணவையும் உடையையும் அளிப்பதில் மிக மும்முரமாக இருந்து கொண்டிருக்கிறீர்கள் என்பதுதான் அதற்குக் காரணம். அந்தத் தீர்மானத்தின் பின்விளைவுகளிலிருந்து உங்களால் தப்ப முடியாது. அவை உங்களையும் உங்கள் குழந்தைகளையும் பாதிக்கத்தான் செய்யும். இது நியாயமல்லதான், ஆனால் வரலாறு எப்போதுதான் நியாயமானதாக இருந்திருக்கிறது?

ஒரு வரலாற்றியலாளன் என்ற முறையில், மக்களுக்கு உணவையோ அல்லது உடைகளையோ என்னால் கொடுக்க முடியாது; ஆனால் சிறிதளவு தெளிவை என்னால் வழங்க முடியும். உலகளாவிய ஏற்றத்தாழ்வுகளைச் சமன்படுத்துவதற்காக மனித இனத்தின் எதிர்காலத்தைப் பற்றிய விவாதத்தில் கலந்து கொள்வதற்கு இது சிலருக்குக் கூடுதல் சக்தியளித்தால், நான் என்னுடைய பணியைச் செவ்வனே செய்துவிட்டேன் என்று நான் கருதுவேன்.

என்னுடைய முதல் புத்தகமான 'சேப்பியன்ஸ்', மனிதகுலத்தின் கடந்தகாலத்தை ஆய்வு செய்தது. முக்கியத்துவமற்ற ஒரு மனிதக் குரங்கு எப்படி இந்த பூமியைத் தன்னுடைய ஆட்சியதிகாரத்தின்கீழ் கொண்டு வந்தது என்பதை அது அலசியது.

என்னுடைய இரண்டாவது புத்தகமான ‘ஹோமோ டியஸ்’, மனித வாழ்வின் வருங்காலத்தை ஆய்வு செய்தது. மனிதர்கள் இறுதியில் எப்படிக் கடவுளராக ஆவர், அறிவு மற்றும் அகவிழிப்புணர்வின் உச்சகட்ட நிலைமை என்னவாக இருக்கும் போன்றவை அதில் அலசப்பட்டன.

இப்புத்தகத்தில் நான் நிகழ்காலத்தை ஆராய விரும்புகிறேன். இந்நூலில், நடப்பு விவகாரங்கள்மீதும் மனிதச் சமுதாயங்களின் உடனடி எதிர்காலத்தின்மீதும் நான் கவனம் செலுத்தியுள்ளேன். இக்கணத்தில் என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது? இன்றைய மாபெரும் சவால்கள் என்னென்ன? நாம் எத்தகைய தேர்ந்தெடுப்புகளை மேற்கொள்ள வேண்டும்? நாம் எதன்மீது கவனம் செலுத்த வேண்டும்? நாம் நம்முடைய குழந்தைகளுக்கு எதைக் கற்றுக் கொடுக்க வேண்டும்?

700 கோடி மக்களுக்கு 700 கோடி நோக்கங்கள் இருக்கும். எனவே, பெரிய விஷயத்தைப் பற்றிச் சிந்திப்பதற்கான நேரமோ அல்லது வளவசதிகளோ அவர்களுக்கு அரிதாகவே இருக்கும். மும்பையின் சேரிப் பகுதியில் தனியொருத்தியாகத் தன்னுடைய இரண்டு குழந்தைகளை வளர்க்கப் போராடிக் கொண்டிருக்கின்ற ஒரு தாயின் கவனம் அடுத்த வேளைச் சாப்பாட்டின்மீதே இருக்கும்; மத்தியத் தரைக்கடலின் நடுவே ஒரு படகில் பயணித்துக் கொண்டிருக்கின்ற அகதிகளின் கண்கள், நிலம் எங்கேனும் தெரிகிறதா என்ற எதிர்பார்ப்புடன் தொடுவானத்தின்மீது அலைபாய்ந்து கொண்டிருக்கும்; கூட்டம் நிரம்பி வழிந்து கொண்டிருக்கின்ற இலண்டன் மருத்துவமனை ஒன்றில் இறந்து கொண்டிருக்கின்ற ஒருவர் தன் ஆற்றல் முழுவதையும் ஒன்றுதிரட்டி, கடைசியாக ஒரு முறை சுவாசிப்பதற்குத் தன்னாலான எல்லா முயற்சிகளையும் மேற்கொள்வார். உலக வெப்பமயமாக்கம், தாராளவாத ஜனநாயகம் போன்ற பிரச்சனைகளைவிட அதிக அவசரமாகக் கையாளப்பட வேண்டிய பிரச்சனைகள் மேற்குறிப்பிடப்பட்டவர்களுக்கு இருக்கின்றன. அவர்களுடைய அப்பிரச்சனைகளை எந்தவொரு புத்தகத்தாலும் முழுமையாக எடுத்துரைக்க முடியாது. அப்படிப்பட்டச் சூழ்நிலைகளில் இருக்கின்ற மக்களுக்குக் கற்பிப்பதற்கான பாடங்கள் எதுவும் என்னிடம் இல்லை. மாறாக, அவர்களிடமிருந்து கற்றுக் கொள்ள மட்டுமே என்னால் முடியும்.

என்னுடைய அக்கறை உலகளாவியது. உலகம் நெடுகிலும் உள்ள சமுதாயங்கள் அனைத்தையும் செதுக்கி வடிவமைத்து, நம்முடைய ஒட்டுமொத்த பூமியின் எதிர்காலத்தின்மீது தாக்கம் ஏற்படுத்த

வாய்ப்புள்ள முக்கியமான ஆற்றல்கள்மீதே என் கவனம் நிலைத்துள்ளது. ஒரு வாழ்வா-சாவா நெருக்கடி நிலையில் சிக்கியுள்ள மக்களுக்குப் பருவநிலை மாற்றத்தின்மீது அக்கறை இருப்பது அரிது. ஆனால் அந்த மாற்றம், இறுதியில், மும்பையின் சேரிப் பகுதிகளை வாழ்வதற்குப் பொருத்தமற்ற இடங்களாக மாற்றக்கூடும், மத்தியத் தரைக்கடல் வழியாக இன்னும் ஏராளமான அகதிகள் அலையலையாகத் திரண்டு வர வழி வகுக்கக்கூடும், இவற்றின் விளைவாக, ஆரோக்கியம் மற்றும் சுகாதாரத்தைப் பொறுத்தவரை ஓர் உலகளாவிய நெருக்கடி உருவாவதற்கு அது வழி வகுக்கும்.

யதார்த்தம் பல இழைகளை உள்ளடக்கிய ஒன்று. இந்நூல், உலக அளவில் நிலவும் இக்கட்டான நிலையின் பல்வேறு அம்சங்களை ஆய்வு செய்ய முயற்சிக்கிறது. ஆனால் இந்த ஆய்வு முழுமையான ஆய்வு என்று இது முழங்கவில்லை. சேப்பியன்ஸ், ஹோமோ டியஸ் ஆகிய நூல்களைப் போலன்றி, இது ஒரு வரலாற்றுரீதியான விவரிப்பாக எழுதப்படவில்லை. மாறாக, சில குறிப்பிட்டப் பாடங்களை இது விவரிக்கிறது. இப்பாடங்கள் ஒவ்வொன்றின் முடிவிலும் எளிய விடைகள் எதுவும் இல்லை. வாசகர்களின் சிந்தனையை மேலும் தூண்டி, இன்றைய காலகட்டத்தின் முக்கிய உரையாடல்கள் சிலவற்றில் அவர்கள் பங்கு கொள்ள அவர்களுக்கு உதவுவதுதான் இப்பாடங்களின் நோக்கமாகும்.

இன்னும் சரியாகக் கூற வேண்டுமென்றால், பொதுமக்களுடன் நான் நிகழ்த்திய உரையாடல்களின் தொகுப்பே இந்நூல். வாசகர்கள், பத்திரிகையாளர்கள், என்னுடன் பணியாற்றுகின்றவர்கள் ஆகியோர் என்னிடம் கேட்டக் கேள்விகளுக்கு நான் அளித்த பதில்களைக் கொண்டு இந்நூலின் பல அத்தியாயங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இந்நூலில் இடம் பெற்றுள்ள சில பகுதிகள் ஏற்கனவே பல்வேறு வடிவங்களில் பிரசுரிக்கப்பட்டுள்ளதால், அவை குறித்தப் பின்னூட்டக் கருத்துகளைப் பெற்று அவற்றைக் கொண்டு என்னுடைய வாதங்களை மெருகேற்றுவதற்கான வாய்ப்பை அது எனக்குக் கொடுத்தது. சில பகுதிகள் தொழில்நுட்பத்தின்மீதும், சில பகுதிகள் அரசியல்மீதும், சில பகுதிகள் மதத்தின்மீதும், சில பகுதிகள் கலையின்மீதும் கவனம் செலுத்துகின்றன. குறிப்பிட்டச் சில அத்தியாயங்கள் மனித ஞானத்தைக் கொண்டாடிப் போற்றுகின்றன, மற்றவை மனித முட்டாள்தனத்தின் இன்றியமையாத பங்கை வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றன. ஆனால்,

எல்லாவற்றையும் உள்ளடக்கிய முக்கியக் கேள்வி ஒன்றுதான்: உலகில் இன்று என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது? நிகழ்ந்து கொண்டிருக்கின்ற விஷயங்களின் ஆழமான பொருள் என்ன?

டொனால்டு டிரம்பின் எழுச்சி எதை உணர்த்துகிறது? போலிச் செய்திகள் எனும் பெரும் கொள்ளைநோய் குறித்து நாம் செய்யக்கூடியது ஏதேனும் இருக்கிறதா? தாராளவாத ஜனநாயகம் ஒரு நெருக்கடி நிலையில் சிக்கியிருக்கிறதா? கடவுள் திரும்பி வந்துவிட்டாரா? ஒரு புதிய உலகப் போர் நிகழப் போகிறதா? எந்த நாகரிகம் உலகின்மீது ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருக்கிறது - மேற்கத்திய நாகரிகமா, சீன நாகரிகமா, அல்லது இஸ்லாமிய நாகரிகமா? ஐரோப்பா மற்ற இடங்களிலிருந்து வரும் அகதிகளுக்குத் தன் கதவுகளைத் திறந்து வைத்திருக்க வேண்டுமா? சமத்துவமின்மை, பருவநிலை மாற்றம் ஆகிய பிரச்சனைகளை தேசியவாதம் தீர்க்குமா? தீவிரவாதம் குறித்து நாம் என்ன செய்ய வேண்டும்?

இந்நூல் ஓர் உலகளாவிய கண்ணோட்டத்திலிருந்து எழுதப்பட்டுள்ளபோதிலும், நம்முடைய தனிப்பட்ட நிலையை நான் உதாசீனப்படுத்தவில்லை. உண்மையில், நம்முடைய காலகட்டத்தின் மாபெரும் புரட்சிகளுக்கும் தனிநபர்களின் அகவாழ்க்கைக்கும் இடையேயான தொடர்பை நான் வலியுறுத்த விரும்புகிறேன். எடுத்துக்காட்டாக, தீவிரவாதம் ஓர் உலகளாவிய அரசியல் பிரச்சனையாக இருக்கின்ற அதே நேரத்தில், ஓர் உள்ளார்ந்த உளவியல் செயல்முறையாகவும் இருக்கிறது. அது நம்முடைய மனங்களில் குடி கொண்டுள்ள பயத்தைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, கோடிக்கணக்கான தனிநபர்களின் தனிப்பட்டக் கற்பனையைத் தன்னுடைய கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதன் மூலம் இயங்குகிறது. அதேபோல, தாராளவாத ஜனநாயக நெருக்கடியும் வெறுமனே நாடாளுமன்றங்களிலும் வாக்குச் சாவடிகளிலும் மட்டுமே அரங்கேறிக் கொண்டிருக்கவில்லை. மாறாக, தனிநபர்களின் நரம்பணுக்களிலும் நரம்பிணைப்புகளிலும்கூட அது நிகழ்ந்து கொண்டிருக்கிறது. தனிநபர்கள் சம்பந்தப்பட்டதுதான் அரசியல் என்பது நாம் கேட்டுக் கேட்டுப் புளித்துப் போன ஒரு கூற்று என்றாலும், அறிவியலறிஞர்களும் பெருநிறுவனங்களும் அரசாங்கங்களும் தனிமனித மூளைக்குள் நுழைந்து அதைத் தங்களுடைய கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரக் கற்றுக் கொண்டிருக்கின்ற இன்றைய

காலகட்டத்தில், அக்கூற்று, அதிகத் தீங்கு நேரவிருப்பதை அறிவிக்கின்ற ஓர் அபாய அறிவிப்பாக ஆகியுள்ளது. அதற்கு ஏற்ப, தனிநபர்களின் நடத்தையையும் ஒட்டுமொத்தச் சமுதாயங்களின் நடத்தையையும் பற்றிய அவதானிப்புகளை இந்நூல் எடுத்துரைக்கிறது.

ஒரு கிராமத்தின் அளவுக்குச் சுருங்கிப் போயுள்ள இன்றைய சர்வதேச உலகம் நம்முடைய தனிப்பட்ட நடத்தையின்மீதும் ஒழுக்கத்தின்மீதும் முன்பு ஒருபோதும் இல்லாத அளவு அழுத்தத்தை ஏற்படுத்தியுள்ளது. எல்லாவற்றையும் கவ்வி இழுக்கின்ற எண்ணற்றச் சிலந்தி வலைகளுக்குள் நாம் ஒவ்வொருவரும் சிக்கியுள்ளோம். ஒரு புறம், அவை நம்முடைய ஒவ்வோர் அசைவையும் மட்டுப்படுத்துகின்றன. மறுபுறம், நம்முடைய சின்னஞ்சிறு அசைவுகள் ஒவ்வொன்றையும் பற்றிய தகவல்களைத் தொலைதூர இடங்களுக்கு அவை அனுப்பி வைக்கின்றன. நம்முடைய அன்றாட வழக்கங்கள் உலகின் மறுகோடியில் உள்ள மக்களுடைய வாழ்க்கையின்மீதும் அங்குள்ள விலங்குகளின் வாழ்க்கையின்மீதும் தாக்கம் ஏற்படுத்துகின்றன. சில தனிநபர்களின் துணிகர முடிவுகள் ஒட்டுமொத்த உலகமும் பற்றி எரியும்படி செய்யக்கூடும். துனீசியா நாட்டில் நிகழ்ந்த, முகமது புவசீசியின் தீக்குளிப்பு அதற்கான ஓர் எடுத்துக்காட்டு. அந்நிகழ்வு 'அரபு வசந்தகால எழுச்சி' உருவாகக் காரணமாக அமைந்தது. அதேபோல, பாலியல் தொந்தரவுகளுக்கு ஆளான பெண்கள் தங்கள் கதைகளைப் பகிர்ந்து கொண்டது #மீடூ இயக்கத்தைத் தூண்டியது.

நம்முடைய தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றிய இந்த உலகளாவிய பரிமாணம் எதை உணர்த்துகிறது? நம்முடைய மதரீதியான மற்றும் அரசியல்ரீதியான பாரபட்சங்களையும், நம்முடைய இனரீதியான மற்றும் பாலினரீதியான சலுகைகளையும், நம்மையும் அறியாமல் அமைப்புரீதியான அடக்குமுறைக்கு உடந்தையாக இருக்கின்ற நம்முடைய போக்கையும் திரை விலக்க வேண்டியது முன்பு எப்போதையும்விட இப்போது அதிக முக்கியமானதாக ஆகியுள்ளது என்பதைத்தான் அது சுட்டிக்காட்டுகிறது. ஆனால் இது யதார்த்தத்தில் சாத்தியமாகக்கூடிய ஒரு முயற்சியா? என்னுடைய தொடுவானத்தைத் தாண்டிப் பரந்து விரிந்துள்ள, மனிதக் கட்டுப்பாட்டிலிருந்து முற்றிலும் விடுபட்டுத் தனித்து இயங்குகின்ற, எல்லாக் கடவுளரையும் சித்தாந்தங்களையும் சந்தேகிக்கின்ற ஓர் உலகில், நன்னெறி சார்ந்த ஒரு நிலையான அடித்தளத்தை நான் எப்படிக் கண்டுபிடிப்பது?

தற்போதைய அரசியல் நெருக்கடியையும் தொழில்நுட்ப நெருக்கடியையும் ஆய்வு செய்வதிலிருந்து இந்நூல் தொடங்குகிறது. இருபதாம் நூற்றாண்டின் முடிவில், பாசிசவாதம், கம்யூனிசவாதம், தாராளவாதம் ஆகியவற்றுக்கு இடையே முளைத்தக் கருத்து மோதல்களைத் தொடர்ந்து தாராளவாதம் மாபெரும் வெற்றி பெற்றதுபோலத் தோன்றியது. ஜனநாயக அரசியல், மனித உரிமைகள், கட்டற்றச் சந்தைமுறை முதலாளித்துவம் ஆகியவை சேர்ந்து இந்த ஒட்டுமொத்த உலகத்தையும் வெற்றி கொள்ளவிருந்ததைப்போலத் தெரிந்தது. ஆனால், வழக்கம்போலவே, வரலாறு ஓர் எதிர்பாராத திருப்பத்தை எதிர்கொண்டது. பாசிசவாதமும் கம்யூனிசவாதமும் நிலை குலைந்து சரிந்த பிறகு, தாராளவாதம் ஒரு நெருக்கடிக்கு உள்ளானது. ஆக, நாம் இப்போது எதை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறோம்?

குறிப்பாக இக்கேள்வி நம்மை ஆழமாக பாதிக்கின்ற ஒன்றாகும். ஏனெனில், தகவல் தொழில்நுட்பத்திலும் உயிர்தொழில்நுட்பத்திலும் ஏற்பட்டுள்ள இரட்டைப் புரட்சிகள் நம்முடைய இனம் இதுவரை சந்தித்திராத மாபெரும் சவால்களை நாம் எதிர்கொள்ளும்படி செய்துள்ள இக்காலகட்டத்தில், தாராளவாதம் தன்னுடைய நம்பகத்தன்மையை இழந்து கொண்டிருக்கிறது. தகவல் தொழில்நுட்பமும் உயிர்தொழில்நுட்பமும் ஒன்றாகக் கைகோர்த்திருப்பது கோடிக்கணக்கான மனிதர்கள் விரைவில் தங்கள் வாழ்வாதாரத்தை இழக்கும் நிலைக்கு அவர்களைத் தள்ளக்கூடும், சுதந்திரத்தையும் சமத்துவத்தையும் குழி தோண்டிப் புதைக்கக்கூடும். பெருந்தரவுப் படிமுறைத் தீர்வுகள் டிஜிட்டல் சர்வாதிகாரத்தைத் தோற்றுவிக்கக்கூடும். அந்த அதிகார அமைப்புமுறையில், அனைத்து அதிகாரமும் விரல்விட்டு எண்ணப்படக்கூடிய மேட்டுக்குடியினரின் கைகளில் குவிந்திருக்கும். அதே நேரத்தில், பெரும்பாலான மக்கள் சுரண்டலுக்கு ஆளாக்கப்படாவிட்டாலும்கூட, அதைவிட அதிக மோசமான ஒரு நிலைக்குத் தள்ளப்படுவர். அதாவது, அவர்கள் உதவாக்கரைகளாக ஆக்கப்படுவர்.

தகவல் தொழில்நுட்பம் மற்றும் உயிர்தொழில்நுட்பத்தின் சங்கமத்தை என்னுடைய முந்தைய நூலான ஹோமோ டியஸில் நான் விரிவாக விளக்கியுள்ளேன். நீண்டகால (பற்பல நூற்றாண்டுகள்) சாத்தியக்கூறுகள் குறித்து அந்நூல் விவாதிக்கிறது. ஆனால் இந்நூல், நாம் தற்போது எதிர்கொண்டுள்ள சமுதாய நெருக்கடிகள், பொருளாதார

நெருக்கடிகள், அரசியல் நெருக்கடிகள் ஆகியவற்றை அலசுகிறது. என்றேனும் ஒருநாள் செயற்கை உயிரினங்கள் உருவாக்கப்பட இருப்பதைப் பற்றிப் பேசுவதில் எனக்கு அவ்வளவு ஆர்வமில்லை, மாறாக, மக்கள் நல அரசு அமைப்புமுறைக்கும், ஐரோப்பிய ஒன்றியம் போன்ற அமைப்புகளுக்கும் ஏற்பட்டுள்ள அச்சுறுத்தலே என் கவனத்தை அதிகமாக ஈர்க்கிறது.

புதிய தொழில்நுட்பங்களின் தாக்கங்கள் அனைத்தையும் பற்றி அலசுவது இந்நூலின் நோக்கமல்ல. குறிப்பாக, தொழில்நுட்பங்கள் பல அருமையான விளைவுகளுக்கு வித்திடுவதற்கான சாத்தியக்கூறுகளைக் கொண்டுள்ளபோதிலும், அவற்றின் ஆபத்துகளையும் அச்சுறுத்தல்களையும் சுட்டிக்காட்டுவதே இங்கு என்னுடைய முக்கிய நோக்கமாகும். தொழில்நுட்பப் புரட்சிகளை முன்னின்று வழிநடத்துகின்ற பெருநிறுவனங்களும் தொழில்முனைவோரும் தங்களுடைய படைப்புகளைப் பற்றி வீர முழக்கம் இடுவதில் அவர்களுடைய சுயநலம் ஒளிந்திருப்பதால், அபாயச் சங்கை எடுத்து ஊதி, விஷயங்கள் எப்படியெல்லாம் மோசமாகப் போகக்கூடும் என்பதை விளக்கும் பொறுப்பு, சமூகவியலாளர்கள், தத்துவவியலாளர்கள், மற்றும் என்னைப் போன்ற வரலாற்றியலாளர்களின் தலைகள்மீது விழுகிறது.

நாம் எதிர்கொண்டுள்ள சவால்களை அடிக்கோடிட்டுக் காட்டிய பிறகு, இந்நூலின் இரண்டாம் பகுதியில், சாத்தியமுள்ள செயல்விடைகள் பலவற்றை நாம் ஆய்வு செய்யவிருக்கிறோம். பேஸ்புக் பொறியாளர்கள் செயற்கை நுண்ணறிவைப் பயன்படுத்தி, சுதந்திரத்தையும் சமத்துவத்தையும் பாதுகாக்கின்ற ஓர் உலகளாவிய சமூகத்தை உருவாக்குவது சாத்தியப்படுமா? உலகமயமாக்கச் செயல்முறையைத் தலைகீழாக மாற்றி, நாடுகளுக்கு மீண்டும் அதிகாரத்தைக் கொடுப்பது அதற்கான விடையாக இருக்கக்கூடுமா? நாம் இன்னும் பின்னோக்கிச் சென்று பார்த்து, பண்டைய மதச் சம்பிரதாயங்களின் ஞான ஊற்றுகளிலிருந்து நம்பிக்கையையும் அறிவையும் கைவசப்படுத்த வேண்டியிருக்குமா?

நாம் இன்று எதிர்கொண்டுள்ள தொழில்நுட்பச் சவால்கள் இதுவரை இல்லாத அளவுக்கு நம்மைத் திணறடிப்பவையாக இருக்கின்றபோதிலும், அரசியல்ரீதியான கருத்து வேறுபாடுகள் தீவிரமானவையாக இருக்கின்றபோதிலும், நம்மால் நம்முடைய பயங்களைக் கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொள்ள முடிந்தால், நம்முடைய

கண்ணோட்டங்களை நாம் சற்று மட்டுப்படுத்தி வைத்துக் கொண்டால், மனிதகுலத்தால் அச்சவால்களை எதிர்கொண்டு சமாளிக்க முடியும் என்பதை இந்நூலின் மூன்றாம் பகுதியில் நாம் பார்க்கவிருக்கிறோம். தீவிரவாதம் குறித்த அச்சுறுத்தலையும், உலகளாவிய போர் குறித்த ஆபத்தையும், அத்தகைய முரண்பாடுகளைத் தூண்டுகின்ற பாரபட்சங்களையும் வெறுப்பையும் குறித்து நாம் என்ன செய்யலாம் என்பதை இந்த மூன்றாவது பகுதி ஆய்வு செய்கிறது.

நான்காவது பகுதி, உண்மைக்குப் பிந்தைய யுகம் குறித்த யோசனையை ஆய்வு செய்கிறது. மேலும், உலகளாவிய வளர்ச்சிகளைப் பற்றி நம்மால் எவ்வளவு தூரம் புரிந்து கொள்ள முடியும் என்பது குறித்தும், நியாயத்தையும் அநியாயத்தையும் எப்படிப் பிரித்தறிவது என்பது குறித்தும் அது கேள்வி எழுப்புகிறது. தாங்கள் உருவாக்கி வைத்துள்ள உலகத்தைப் பற்றிப் புரிந்து கொள்வதற்கான திறன் சேப்பியன்ஸ் இனத்தினரான நமக்கு உண்மையிலேயே இருக்கிறதா? கற்பனையிலிருந்து யதார்த்தத்தைப் பிரிக்கின்ற ஒரு தெளிவான எல்லைக்கோடு இன்னும் நிலவுகிறதா?

இந்நூலின் இறுதிப் பகுதியான ஐந்தாவது பகுதியில் நான் கையாள்கின்ற விஷயம் இதுதான்: பழைய புனைகதைகள் தவிடுபொடியாகி, அவற்றின் இடங்களை நிரப்புவதற்கு இதுவரை புதிதாக எந்தவொரு புனைகதையும் முளைத்திராத, குழப்பம் சூழ்ந்த இன்றைய காலகட்டத்தில், நான் பல்வேறு இழைகளை ஒருங்கிணைத்து, வாழ்க்கையை ஒரு பொதுவான கண்ணோட்டத்தில் பார்க்கிறேன். நாம் யார்? வாழ்வில் நாம் என்ன செய்ய வேண்டும்? எந்த வகையான திறமைகள் நமக்குத் தேவை? அறிவியல், கடவுள், அரசியல், மதம் ஆகியவற்றைப் பற்றி நாம் அறிந்து வைத்துள்ள விஷயங்களையும் அறிந்திராத விஷயங்களையும் வைத்துப் பார்க்கும்போது, இன்று வாழ்வின் அர்த்தத்தைப் பற்றி நம்மால் என்ன சொல்ல முடியும்?

இது சற்று யதார்த்தத்தை மீறிய இலட்சியமாகத் தோன்றக்கூடும். ஆனால், ஹோமோ சேப்பியன்ஸால் இனியும் காத்துக் கொண்டிருக்க முடியாது. தத்துவம், மதம், அறிவியல் ஆகிய அனைத்தின் காலமும் வேகமாகக் கரைந்து கொண்டிருக்கிறது. வாழ்வின் அர்த்தத்தைப் பற்றி மக்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக விவாதித்து வந்துள்ளனர். இந்த விவாதத்தை முடிவின்றி நம்மால் தொடர்ந்து கொண்டிருக்க முடியாது. எக்கணத்திலும் நிகழக்கூடும் என்று எதிர்பார்க்கப்படுகின்ற சூழலியல்

நெருக்கடி, மேன்மேலும் அதிகரித்துக் கொண்டிருக்கின்ற, பேரழிவை ஏற்படுத்தும் ஆயுதங்கள் குறித்த அச்சுறுத்தல், சீர்குலைவை ஏற்படுத்தக்கூடிய புதிய தொழில்நுட்பங்களின் வருகை ஆகியவை அந்த விவாதம் தொடர அனுமதிக்கப் போவதில்லை. மிக முக்கியமாக, வாழ்க்கையை மறுவடிவமைப்பு செய்து, அதன் கட்டமைப்பை முற்றிலுமாக மாற்றியமைப்பதற்கான சக்தியைச் செயற்கை நுண்ணறிவும் உயிர்தொழில்நுட்பமும் மனிதகுலத்திற்குக் கொடுத்துக் கொண்டிருக்கின்றன. வாழ்வின் அர்த்தம் பற்றிய வெளிப்படையான அல்லது மறைமுகமான புனைகதையின் அடிப்படையில், இந்த சக்தியை எவ்வாறு பயன்படுத்துவது என்பதை யாரேனும் மிக விரைவில் தீர்மானித்தாக வேண்டும். தத்துவவியலாளர்கள் பெரும் பொறுமைசாலிகள், ஆனால் பொறியாளர்களுக்கு அவ்வளவு பொறுமை கிடையாது. முதலீட்டாளர்களுக்கோ பொறுமை என்றால் என்னவென்றே தெரியாது. உயிர்களைச் செயற்கையாகப் படைப்பதற்கான சக்தியைக் கொண்டு என்ன செய்வது என்பது உங்களுக்குத் தெரியவில்லை என்றால், நீங்கள் அதற்கான விடையைக் கண்டுபிடிப்பதற்காகச் சந்தை சக்திகள் ஓராயிரம் ஆண்டுகள் காத்துக் கொண்டிருக்கப் போவதில்லை. பார்வைக்குப் புலப்படாத, சந்தையின் அசுரக் கரங்கள், தாமே ஒரு முடிவெடுத்து அதை உங்கள்மீது திணிக்கும். நீங்கள் மகிழ்ச்சியோடும் நம்பிக்கையோடும் உங்களுடைய எதிர்காலத்தைக் காலாண்டு வரவு-செலவு அறிக்கைகளின் வசம் ஒப்படைக்கத் தயாராக இருந்தாலொழிய, வாழ்க்கை என்றால் என்ன என்பது பற்றிய ஒரு தெளிவான யோசனை உங்களுக்கு இருக்க வேண்டியது இன்றியமையாதது.

இந்நூலின் இறுதி அத்தியாயத்தில் நான் ஒருசில தனிப்பட்டக் கருத்துகளைக் கொடுத்திருக்கிறேன். நம்முடைய இனம் முற்றிலுமாக அழித்தொழிக்கப்பட்டு ஒரு புத்தம்புதிய நாடகம் அரங்கேறுவதற்கு முன்பாக, ஒரு சேப்பியன்ஸ் இன்னொரு சேப்பியன்ஸிடம் பேசுவதுபோல நான் உங்களோடு பேசியிருக்கிறேன்.

அறிவு சார்ந்த இப்பயணத்தைத் தொடங்குவதற்கு முன்பாக, மிக முக்கியமான ஒரு கருத்தை நான் இங்கு வலியுறுத்த விரும்புகிறேன். இந்நூலின் பெரும்பகுதியில், தாராளவாத உலகக் கண்ணோட்டத்தின் குறைபாடுகளையும் ஜனநாயக அமைப்புமுறையின் குறைபாடுகளையும் நான் அலசியுள்ளேன். தாராளவாத ஜனநாயகம் மிகவும் தனித்துவமான முறையில் பிரச்சனைகரமானது என்று நான் நம்புவது அதற்குக்

காரணமல்ல. மாறாக, நவீன உலகின் சவால்களைக் கையாள்வதற்கு மனிதர்கள் இதுவரை உருவாக்கியுள்ள மிகவும் வெற்றிகரமான, தேவைக்கு ஏற்றபடி மாற்றியமைக்கப்படக்கூடிய அரசியல் அமைப்புமுறை இது என்று நான் நினைப்பதாலேயே நான் அவ்வாறு அலசியுள்ளேன். ஒவ்வொரு சமுதாயத்திலும் வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் இது பொருந்தும் என்று கூற முடியாவிட்டாலும், மற்ற எந்த மாற்றுகளையும்விட இது அதிகமான சமூகங்களிலும் அதிகமான சூழ்நிலைகளிலும் தன்னுடைய மதிப்பை நிரூபித்துள்ளது. எனவே, நாம் எதிர்கொண்டுள்ள புதிய சவால்களை நாம் ஆய்வு செய்யும்போது, தாராளவாத ஜனநாயகத்தின் குறைபாடுகளைப் புரிந்து கொள்வதும், அதன் தற்போதைய அமைப்புகளை எவ்வாறு நமக்கு ஏற்றவாறு தகவமைத்துக் கொண்டு மேம்படுத்துவது என்பதை ஆய்வு செய்வதும் இன்றியமையாதது.

துரதிர்ஷ்டவசமாக, மனிதகுலத்தின் எதிர்காலத்தைப் பற்றிய ஒரு வெளிப்படையான கலந்துரையாடலில் ஈடுபடுவதை விடுத்து தாராளவாத ஜனநாயகத்தின் மதிப்பைச் சீர்குலைப்பதை மட்டுமே ஒரே நோக்கமாகக் கொண்ட சர்வாதிகாரிகளும், தாராளவாதத்திற்கு எதிராகச் செயல்பட்டு வரும் பல்வேறு அமைப்புகளும், தற்போதைய அரசியல் சூழலில், தாராளவாதத்தையும் ஜனநாயகத்தையும் பற்றிய எந்தவொரு தீவிர விமர்சனத்தையும் தங்களுக்குச் சாதகமாக ஆக்கிக் கொள்ளக்கூடும். தாராளவாத ஜனநாயகத்தின் பிரச்சனைகளைப் பற்றி விவாதிக்க அவர்கள் மகிழ்ச்சியாக முன்வரக்கூடும் என்றாலும், தங்களை நோக்கி வீசப்படுகின்ற எந்தவொரு விமர்சனத்தையும் அவர்கள் ஒருபோதும் சகித்துக் கொள்வதில்லை.

எனவே, ஒரு நூலாசிரியர் என்ற முறையில் நான் ஒரு கடினமான தேர்ந்தெடுப்பை மேற்கொள்ள வேண்டியிருந்தது. என்னுடைய சொற்கள் தவறாக மேற்கோள் காட்டப்படக்கூடும், அதிகரித்துக் கொண்டிருக்கும் ஏகாதிபத்தியங்களை நியாயப்படுத்துவதற்கு அவை பயன்படுத்தப்படக்கூடும் என்ற ஆபத்தைத் துணிந்து எதிர்கொண்டு, நான் என் மனத்தில் உள்ளவற்றை வெளிப்படையாகப் பேச வேண்டுமா? அல்லது, எந்தச் சர்ச்சைக்கும் இடம் கொடுக்காத விதத்தில் என்னுடைய கருத்துகளை சுயதணிக்கை செய்துவிட்டு மேலோட்டமாகப் பேச வேண்டுமா? தாராளவாதத்திற்குப் புறம்பான ஆட்சிகள் தம்முடைய எல்லைகளுக்கு அப்பாலும் பேச்சு சுதந்திரத்தை மட்டுப்படுத்துகின்றன

என்பதற்கான ஓர் அடையாளம்தான் இது. இப்படிப்பட்ட ஆட்சிகளின் பரவலால், நம்முடைய இனத்தின் எதிர்காலத்தைப் பற்றித் தீவிரமாகச் சிந்திப்பது மேன்மேலும் அதிக ஆபத்தானதாக ஆகிக் கொண்டிருக்கிறது.

நான் ஆழமாக யோசித்துவிட்டு, சுயதணிக்கைக்கு பதிலாக சுதந்திரமான உரையாடலைத் தேர்ந்தெடுத்தேன். தாராளவாத அமைப்புமுறையை விமர்சிக்காமல் நம்மால் அதன் குறைபாடுகளைச் சரி செய்யவும் முடியாது, அதற்கு அப்பால் செல்லவும் முடியாது. ஆனால் ஒரு விஷயத்தை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். தங்கள் விருப்பம்போலச் சிந்திப்பதற்கும் தங்கள் கருத்துகளை வெளிப்படுத்துவதற்குமான சுதந்திரம் மக்களுக்கு ஓரளவாவது இருந்தால் மட்டுமே இதைப் போன்ற ஒரு புத்தகத்தை எழுதுவது சாத்தியப்படும். நீங்கள் இப்புத்தகத்தை மதிக்கிறீர்கள் என்றால், கருத்துச் சுதந்திரத்தையும் நீங்கள் மதித்தாக வேண்டும்.

## பகுதி ஒன்று

## தொழில்நுட்ப சவால்

தகவல் தொழில்நுட்பம் மற்றும் உயிர்தொழில்நுட்பத்தின் சங்கமத்தின் விளைவாக, மனிதகுலம் இதுவரை ஒருபோதும் எதிர்கொண்டிராத மாபெரும் சவால்கள் நம் வழியை மறித்துக் கொண்டு நிற்கின்ற இந்நேரத்தில், கடந்த பல பத்தாண்டு காலமாக சர்வதேச அரசியல்மீது ஆதிக்கம் செலுத்தி வந்துள்ள தாராளவாதப் புனைகதையின்மீதான நம்பிக்கையை மனிதகுலம் மெல்ல மெல்ல இழந்து கொண்டிருக்கிறது.

### 1

### ஏமாற்றம்

### வரலாற்றின் இறுதி முடிவு தள்ளிப் போடப்பட்டுள்ளது

உண்மைத் தகவல்கள், எண்கள், மற்றும் சமன்பாடுகளின் வடிவில் அல்லாமல், புனைகதைகளின் வடிவில்தான் மனிதர்கள் சிந்திக்கின்றனர். ஒவ்வொரு நபரும், ஒவ்வொரு குழுவும், ஒவ்வொரு நாடும் தன் சொந்தக் கதைகளையும் கட்டுக்கதைகளையும் கொண்டுள்ளது. ஆனால், இருபதாம் நூற்றாண்டின்போது, நியூயார்க், இலண்டன், பெர்லின், மாஸ்கோ ஆகிய நகரங்களைச் சேர்ந்த, உலக அளவில் தாக்கம் ஏற்படுத்தக்கூடிய சக்தியும் அதிகாரமும் கொண்ட ஒரு சிறு குழுவினர், மூன்று பிரம்மாண்டமான புனைகதைகளை உருவாக்கினர். பாசிசவாதம், கம்யூனிசவாதம், தாராளவாதம் ஆகிய அம்மூன்று புனைகதைகளும் ஒட்டுமொத்தக் கடந்தகாலத்தை விளக்கும் என்றும், ஒட்டுமொத்த உலகின் எதிர்காலத்தைக் கணிக்கும் என்றும் அக்குழுவினர் முழங்கினர். இரண்டாம் உலகப் போர் அந்தப் பாசிசவாதக் கதையை நிர்மூலமாக்கியது. 1940களின் பிற்பகுதியிலிருந்து 1980களின் பிற்பகுதிவரை, கம்யூனிசவாதம், தாராளவாதம் ஆகிய இரண்டே இரண்டு கதைகளுக்கு இடையேயான ஒரு போர்க்களமாக இவ்வுலகம் மாறியது. பிறகு கம்யூனிசவாதக் கதையும் நிலை குலைந்து தரைமட்டமாகியது. இறுதியில், மனிதகுலத்தின் கடந்தகாலத்திற்கான, ஆதிக்கத்துடன்கூடிய வழிகாட்டியாகவும், இவ்வுலகின் எதிர்காலத்திற்கான இன்றியமையாத கையேடாகவும் தாராளவாதம் மட்டும் நீடித்தது. உலகளாவிய தாக்கம்

ஏற்படுத்தக்கூடிய சக்தி கொண்ட அச்சிறு குழுவினருக்கு அப்படித்தான் தோன்றியது.

தாராளவாதக் கதையானது சுதந்திரத்தின் மதிப்பையும் சக்தியையும் போற்றுகிறது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, மிகச் சில அரசியல் உரிமைகளையும் பொருளாதார வாய்ப்புகளையும் தனிப்பட்ட சுதந்திரங்களையும் மட்டுமே கொடுத்த அடக்குமுறை ஆட்சிகளின்கீழ் மக்கள் வாழ்ந்தனர் என்றும், அத்தகைய ஆட்சிகள் தனிநபர்களின் நடமாட்டத்தையும் யோசனைகளின் பரவலையும் நுகர்வுப் பொருட்களின் போக்குவரத்தையும் மட்டுப்படுத்தின என்றும் அக்கதை கூறுகிறது. ஆனால் மக்கள் தங்கள் சுதந்திரத்திற்காகப் போராடியதைத் தொடர்ந்து, சுதந்திரம் படிப்படியாக வேர் பிடிக்கத் தொடங்கியது. கொடூரமான சர்வாதிகார ஆட்சிகளின் இடத்தை ஜனநாயக ஆட்சிகள் பிடித்துக் கொண்டன. பொருளாதாரக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டு, அவற்றின் இடத்தை, தனியார்த் தொழில் நிறுவனங்கள் அரசுக் கட்டுப்பாடுகள் எதுவும் இல்லாமல் சுதந்திரமாக இயங்கும் வகையிலான ஒரு பொருளாதார அமைப்புமுறை எடுத்துக் கொண்டது. கண்மூடித்தனமான மத நம்பிக்கைகளைக் கொண்ட சாமியார்களுக்கும் காலங்காலமாக நிலைத்து வந்துள்ள சம்பிரதாயங்களுக்கும் கீழ்ப்படிந்து நடப்பதற்கு பதிலாக, சுயமாகச் சிந்திக்கவும் தங்கள் இதயம் காட்டிய பாதையில் செல்லவும் மக்கள் கற்றுக் கொண்டனர். சுவர்கள், அகழிகள், முள் கம்பிச் சுருள்களால் ஆன பாதுகாப்பு வேலிகள் ஆகியவற்றின் இடத்தை அகலமான சாலைகளும் தடிமனான பாலங்களும் மும்முரமான விமான நிலையங்களும் எடுத்துக் கொண்டன.

உலகில் எல்லா விஷயங்களும் சிறப்பாக இல்லை என்பதையும், நாம் தாண்டிச் செல்ல வேண்டிய முட்டுக்கட்டைகள் ஏராளமானவை இன்னும் இருக்கின்றன என்பதையும் தாராளவாதப் புனைகதை அங்கீகரிக்கிறது. நம்முடைய பூமியின் பெரும்பகுதி இன்னும் கொடுங்கோலர்களின் ஆதிக்கத்தில்தான் இருக்கிறது. அனைத்துச் சுதந்திரங்களையும் உள்ளடக்கிய தாராளவாத நாடுகளில்கூட, குடிமக்கள் பலர் ஏழ்மையாலும் வன்முறையாலும் அடக்குமுறையாலும் துன்புற்றுக் கொண்டிருக்கின்றனர். ஆனால் இப்பிரச்சனைகளிலிருந்து மீள்வதற்கு என்ன செய்யப்பட வேண்டும் என்பதை நாம் அறிவோம். மக்களுக்கு அதிக சுதந்திரம் கொடுக்க வேண்டும், அவ்வளவுதான். நாம் மனித உரிமைகளைப் பாதுகாக்க வேண்டும், எல்லோருக்கும் வாக்குரிமை

வழங்க வேண்டும், கட்டற்றச் சந்தைகளை நிறுவ வேண்டும், தனிநபர்களும் யோசனைகளும் நுகர்வுப் பொருட்களும் சுதந்திரமாகவும் எளிதாகவும் உலகம் நெடுகிலும் வளைய வர அனுமதிக்க வேண்டும். ஜார்ஜ் புஷ், பராக் ஒபாமா ஆகியோர் சில லேசான வேறுபாடுகளுடன் ஏற்றுக் கொண்ட இந்த தாராளவாதத் தீர்வைப் பொறுத்தவரை, நம்முடைய அரசியல் அமைப்புமுறையையும் பொருளாதார அமைப்புமுறையையும் நாம் தொடர்ந்து தாராளமயமாக்கிக் கொண்டும் உலகமயமாக்கிக் கொண்டும் இருந்தால், நாம் நிச்சயமாக எல்லோருக்கும் அமைதியையும் செழிப்பையும் உருவாக்கிவிடுவோம்!

தடுத்து நிறுத்தப்பட முடியாத இந்த முன்னேற்ற அணிவகுப்பில் கலந்து கொள்ளும் நாடுகள் விரைவில் அமைதியையும் செழிப்பையும் வெகுமதிகளாகப் பெறும். எப்படியும் நிகழவிருக்கின்ற இந்த முன்னேற்றத்தை எதிர்க்கின்ற நாடுகள், இறுதியில் அதற்கான பின்விளைவுகளை எதிர்கொண்டு துன்புறும். யதார்த்த நிலைமையைப் புரிந்து கொண்டு, தம்முடைய எல்லைகளைத் திறந்துவிட்டு, தம்முடைய சமுதாயங்களையும் அரசியலையும் சந்தைகளையும் தாராளமயமாக்கும்வரை அவை தொடர்ந்து துன்புறும். அவை தம்முடைய போக்கை மாற்றிக் கொள்வதற்குச் சில காலம் ஆகலாம், ஆனால் இறுதியில், வட கொரியா, ஈராக், எல் சால்வடோர் ஆகிய நாடுகள்கூட டென்மார்க்கைப்போலவோ அல்லது அமெரிக்காவின் அயோவா மாநிலத்தைப்போலவோ காட்சியளிக்கக்கூடும்.

1990க்கும் 2010க்கும் இடைப்பட்டக் காலத்தில் இப்புனைகதை ஓர் உலகளாவிய மந்திரமாக ஆனது. வரலாற்றின் மிக முக்கியமான, தவிர்க்கப்பட முடியாத அந்த அணிவகுப்பில் சேர்ந்து கொள்ளும் ஒரு முயற்சியாக, பிரேசிலில் தொடங்கி இந்தியாவரை பல அரசுகள் தாராளவாதத்தை சுவீகரித்துக் கொண்டன. அவ்வாறு செய்யத் தவறிய நாடுகள், பல யுகங்களுக்கு முந்தைய தொல்லுயிர் எச்சங்களைப்போலத் தோன்றின. அரசியலை தாராளமயமாக்க மறுத்ததன் மூலம், சீன அரசு, பிற்போக்கான ஒன்றாக ஆகிக் கொண்டிருந்ததாக 1997 ஆம் ஆண்டில் அமெரிக்க அதிபர் பில் கிளிண்டன் சீன அரசாங்கத்தைக் கடுமையாகக் கண்டித்தார்.

ஆனாலும், 2008 ஆம் ஆண்டில் ஏற்பட்ட உலகளாவிய பொருளாதார நெருக்கடியைத் தொடர்ந்து, உலகம் நெடுகிலும் உள்ள மக்கள் தாராளவாதப் புனைகதைமீது அதிகமாக நம்பிக்கை இழக்கலாயினர்.

சுவர்களும் அகழிகளும் மீண்டும் நடைமுறைக்கு வந்துவிட்டன. பிற நாடுகளில் குடியேறுவதற்கான எதிர்ப்பும் வர்த்தக உடன்படிக்கைகளுக்கான எதிர்ப்பும் வலுத்துக் கொண்டிருக்கின்றன. ஜனநாயக அரசுகள்போல வெளிவேடம் போட்டுக் கொண்டிருக்கின்ற அரசுகள் நீதித் துறையின் சுதந்திரத்தையும் பத்திரிகைச் சுதந்திரத்தையும் வெகுவாக மட்டுப்படுத்தி, தம்மை எதிர்க்கின்ற அனைவரையும் தேசத் துரோகிகள் என்று சித்தரிக்கின்றன. துருக்கி, இரஷ்யா போன்ற நாடுகளிலுள்ள, ஆதிக்கக் கொள்கைகளைக் கொண்ட தலைவர்கள், தாராளவாதக் கொள்கைகளுக்கு எதிரான கொள்கைகளைக் கொண்ட புதிய வகை ஜனநாயக முறைகளையும் சர்வாதிகார முறைகளையும் நடைமுறைப்படுத்திப் பரிசோதித்துப் பார்க்கின்றனர். இன்று, சீனக் கம்யூனிசவாதக் கட்சி பிற்போக்கான ஒன்றாக இருக்கிறது என்று மிகச் சிலரே துணிச்சலாக முழங்குவர்.ஷ

பிரிட்டனில் நடைபெற்ற 'பிரெக்சிட்' வாக்கெடுப்பு, அமெரிக்காவில் டொனால்டு டிரம்பின் எழுச்சி போன்ற நிகழ்வுகளை உள்ளடக்கிய 2016 ஆம் ஆண்டில்தான், இந்த ஏமாற்றப் பேரலை, முக்கிய தாராளவாத அரசாங்கங்களைக் கொண்ட மேற்கத்திய ஐரோப்பாவையும் வட அமெரிக்காவையும் எட்டியது. ஒருசில ஆண்டுகளுக்கு முன்புதான் அமெரிக்கர்களும் ஐரோப்பியர்களும் ஈராக்கையும் லிபியாவையும் துப்பாக்கி முனையில் தாராளமயமாக்க முயன்று கொண்டிருந்தனர். ஆனால், கென்டக்கி மற்றும் யார்க்ஷயரில் உள்ள பலர், இந்த தாராளவாத முன்னோக்கு விரும்பத்தக்கதல்ல என்றும், அடையத்தக்கதல்ல என்றும் பார்க்கத் தொடங்கியுள்ளனர். பழைய அடுக்கதிகார உலகத்தை விரும்புகின்ற சிலர், தங்களுடைய இனரீதியான, நாடுரீதியான மற்றும் பாலினரீதியான சலுகைகளை விட்டுக்கொடுக்க விரும்பவில்லை. மற்றவர்கள், தாராளமயமாக்கலும் உலகமயமாக்கலும் பெருவாரியான மக்களின் நலனை ஒதுக்கிவிட்டு ஒரு சிறு மேட்டுக்குடியினருக்கு அதிகாரம் வழங்குகின்ற ஒரு மாபெரும் மோசடி மட்டுமே என்ற முடிவுக்கு (சரியாகவோ அல்லது தவறாகவோ) வந்துள்ளனர்.

1938 ஆம் ஆண்டில், ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுப்பதற்கு மனிதர்களுக்கு மூன்று உலகளாவிய புனைகதைகள் வழங்கப்பட்டன. 1968 ஆம் ஆண்டில் இரண்டு கதைகள் வழங்கப்பட்டன. 1998 ஆம் ஆண்டில் ஒரே ஒரு கதை மட்டுமே நிலைத்தது. 2018 ஆம் ஆண்டில் நம்மிடம் எந்தவொரு கதையும் இல்லை. சமீப காலங்களாகப்

பெரும்பான்மை உலகின்மீது ஆதிக்கம் செலுத்தி வந்துள்ள அந்த தாராளவாத மேட்டுக்குடியினர் ஒருவித அதிர்ச்சிக்கு ஆளாகியிருப்பதிலும், நிலை தடுமாறிப் போயிருப்பதிலும் எந்த வியப்பும் இல்லை. ஏதேனும் ஒரு கதை இருப்பதுதான் ஓரளவுக்கு ஒரு பாதுகாப்புணர்வைக் கொடுக்கின்ற ஒரு சூழ்நிலையாக இருக்கும். அப்போது எல்லாம் மிகத் தெளிவாக இருக்கும். ஆனால், திடீரென்று எந்தவொரு கதையும் இல்லாமல் போனால் அது மிகவும் அச்சுறுத்துவதாக இருக்கும். அப்போது எதுவுமே அர்த்தம் வாய்ந்ததாக இருக்காது. வரலாறு எப்படி முன்கூட்டியே வகுக்கப்பட்டத் தன்னுடைய பாதையிலிருந்து விலகியது என்பதை 1980களில் சோவியத் ஒன்றியத்தில் வாழ்ந்த மேட்டுக்குடியினரைப்போலவே தாராளவாதிகளும் புரிந்து கொள்வதில்லை. யதார்த்தத்தை முறையாக அர்த்தப்படுத்துவதற்கான ஒரு மாற்றுப் பார்வையும் அவர்களிடம் இல்லை. அவர்கள் குழப்பத்தில் நிலை தடுமாறிப் போயிருப்பதால், உலகம் விரைவில் அழியப் போகிறது என்ற ரீதியில் அவர்கள் சிந்திக்கின்றனர். வரலாற்றின் முடிவு மகிழ்ச்சிகரமானதாக அமையத் தவறும் பட்சத்தில், அது நிச்சயமாகக் கடவுளின் இறுதித் தீர்ப்புக்கு முந்தைய நாளன்று நன்மைக்கும் தீமைக்கும் இடையே நடைபெறவிருக்கின்ற போரை நோக்கியே சென்று கொண்டிருக்கிறது என்று அவர்கள் நினைப்பதுபோலத் தோன்றுகிறது. அவர்களுடைய மனம் யதார்த்தத்தைப் புரிந்து கொள்ள முடியாமல், பேரழிவைப் பற்றித் தொடர்ந்து கற்பனை செய்கிறது. ஒரு மோசமான தலைவலி ஏற்படும்போது, தன்னுடைய உயிரைப் பறிக்கக்கூடிய ஏதோ ஒரு கட்டி தன்னுடைய மூளையில் உருவாகியிருப்பதற்கான அறிகுறிதான் அந்தத் தலைவலி என்று ஒருவர் கற்பனை செய்வதைப்போல, பிரெக்சிட், டொனால்டு டிரம்பின் எழுச்சி போன்றவை மனித நாகரிகம் முடிவுக்கு வரவிருப்பதை அறிவிக்கின்ற அபசகுனங்களே என்று பல தாராளவாதிகள் பயப்படுகின்றனர்.

## கொசுக் கொலையிலிருந்து சிந்தனைக் கொலைவரை

குழப்ப உணர்வும் எக்கணமும் நிகழவுள்ள அழிவும் அதிவேகத்தில் நிகழ்ந்து வருகின்ற தொழில்நுட்பச் சீர்குலைவுகளால் மேன்மேலும் மோசமடைகின்றன. நீராவி எஞ்சின்களும் எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலைகளும் தொலைக்காட்சிப் பெட்டிகளும் கோலோச்சிய ஓர் உலகத்தை நிர்வகிப்பதற்காகத் தொழில் யுகத்தின்போது செதுக்கி

வடிவமைக்கப்பட்ட தாராளவாத அரசியல் அமைப்புமுறை, தகவல் தொழில்நுட்பத்திலும் உயிர்தொழில்நுட்பத்திலும் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கின்ற புரட்சிகரமான மாற்றங்களைக் கையாள முடியாமல் திணறுகிறது.

புதிய தொழில்நுட்பங்களை அரசியல்வாதிகளாலும் வாக்காளர்களாலும் புரிந்து கொள்ள முடிவதில்லை. எனவே, அவற்றின் பூதாகர ஆற்றலை முறைப்படுத்துவதற்கான திறன் அவர்களிடம் இல்லை. 1990களிலிருந்து வேறு எந்தவொரு காரணியையும்விட இணையத்தளம் இவ்வுலகத்தை மிக அதிகமாக மாற்றியுள்ளது. ஆனாலும், இணையத்தளப் புரட்சி, அரசியல் கட்சிகளைவிட அதிகமாகப் பொறியாளர்களின் கட்டுப்பாட்டில்தான் இயங்கியது. இணையத்தளம் வேண்டும் என்று நீங்கள் எப்போதேனும் வாக்களித்தீர்களா? எது தன்னைத் தாக்கியது என்பதைப் புரிந்து கொள்ள முடியாமல் ஜனநாயக அமைப்புமுறை இன்னும் போராடிக் கொண்டிருக்கிறது. செயற்கை நுண்ணறிவின் வரவு, எண்மப் பரிவர்த்தனைப் பதிவேட்டுப் பிணையப் புரட்சி போன்ற அடுத்தடுத்த அதிர்ச்சிகளைக் கையாளத் தேவையான கருவிகள் எதுவும் அதனிடம் இல்லை.

இன்று, மிகச் சில மனிதர்கள் மட்டுமே புரிந்து கொள்ளக்கூடிய விதத்தில் நிதி அமைப்புமுறையைக் கணினிகள் ஏற்கனவே மிகவும் சிக்கலாக்கி வைத்துள்ளன. செயற்கை நுண்ணறிவு தொடர்ந்து மேம்படும்போது, நிதியைப் பற்றி மனிதர்கள் எவராலும் புரிந்து கொள்ள முடியாத ஒரு நிலை விரைவில் எட்டப்படும். இது அரசியல் செயல்முறையின்மீது எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்தும்? தன்னுடைய நிதிநிலை அறிக்கைக்கு அல்லது புதிய வரிச் சீர்திருத்தத்திற்கு ஒரு படிமுறைத் தீர்வின் ஒப்புதலை எதிர்பார்த்து ஓர் அரசாங்கம் பணிவோடு காத்திருப்பதை உங்களால் கற்பனை செய்து பார்க்க முடியுமா? இதற்கிடையே, எண்மப் பரிவர்த்தனைப் பதிவேட்டுப் பிணையங்களும் பிட்காயின் போன்ற மறைக்குறியீட்டு நாணயங்களும் பண அமைப்புமுறையை மேம்படுத்தி அதை முற்றிலுமாக மாற்றியமைக்கக்கூடும். அப்போது புரட்சிகரமான வரிச் சீர்திருத்தங்கள் தவிர்க்கப்பட முடியாதவையாக ஆகும். எடுத்துக்காட்டாக, டாலர்களுக்கு வரி விதிப்பது இயலாததாகவும் பொருத்தமற்றதாகவும் ஆகக்கூடும். ஏனெனில், பெரும்பான்மைப் பரிவர்த்தனைகள் தேசிய நாணயப் பரிமாற்றத்தையோ அல்லது எந்தவிதமான நாணயப் பரிமாற்றத்தையோ

உள்ளடக்கியவையாக இருக்க மாட்டா. எனவே, அரசாங்கங்கள் முற்றிலும் புதிய வரிகளைக் கண்டுபிடிக்க வேண்டியிருக்கும். தகவல்மீதான ஒரு வரியைக்கூட அவை விதிக்க வேண்டியிருக்கலாம் (இந்த வரி, பொருளாதாரத்தில் மிக முக்கியமான சொத்தாகவும் இருக்கும், எண்ணற்றப் பரிவர்த்தனைகளில் பரிமாற்றம் செய்யப்படுகின்ற ஒரே விஷயமாகவும் இருக்கும்). பணம் முழுவதும் தீர்ந்து போவதற்கு முன்பாக அரசியல் அமைப்புமுறை இந்த நெருக்கடியைக் கையாளுமா?

மிக முக்கியமாக, தகவல் தொழில்நுட்பத்திலும் உயிர்தொழில்நுட்பத்திலும் ஏற்பட்டுள்ள இரட்டைப் புரட்சிகள், பொருளாதாரங்களையும் சமுதாயங்களையும் மட்டுமல்லாமல் நம்முடைய உடல்களையும் மனங்களையும்கூட மறுகட்டமைப்பு செய்யக்கூடும். கடந்தகாலத்தில், மனிதர்களாகிய நாம், நமக்கு வெளியே உள்ள உலகத்தைக் கட்டுப்படுத்தக் கற்றுக் கொண்டோம். ஆனால், நமக்குள் இருக்கின்ற உலகின்மீது நமக்கு மிகச் சொற்பமான கட்டுப்பாடே இருந்தது. ஓர் அணையைக் கட்டுவது எப்படி என்பதையும், பாய்ந்தோடுகின்ற ஓர் ஆற்றைத் தடுத்து நிறுத்துவது எப்படி என்பதையும் நாம் அறிந்திருந்தோம், ஆனால் மூப்படைவதிலிருந்து நம்முடைய உடலைத் தடுத்து நிறுத்துவது எப்படி என்பதை நாம் அறியவில்லை. பாசன அமைப்புமுறை ஒன்றை வடிவமைப்பது எப்படி என்பதை நாம் அறிந்திருந்தோம், ஆனால் ஒரு மூளையை எவ்வாறு வடிவமைப்பது என்பது பற்றிய எள்ளளவு யோசனைகூட நமக்கு இருக்கவில்லை. கொசுக்கள் நம்முடைய காதுகளில் ரீங்காரமிட்டு நம்முடைய தூக்கத்திற்கு இடையூறு விளைவித்தால் அவற்றை எப்படிக் கொல்ல வேண்டும் என்பதை நாம் அறிந்திருந்தோம், ஆனால் ஓர் எண்ணம் நம் மனத்திற்குள் ரீங்காரமிட்டுக் கொண்டு இரவு முழுவதும் நம்மைத் தூங்கவிடாமல் செய்தால், அந்த எண்ணத்தை எப்படி விரட்டியடிப்பது என்பதை நம்மில் பெரும்பாலானோர் அறிந்திருக்கவில்லை.

உயிர்தொழில்நுட்பத்திலும் தகவல் தொழில்நுட்பத்திலும் ஏற்படும் புரட்சிகள் நமக்கு வெளியே உள்ள உலகத்தைக் கட்டுப்படுத்துவதற்கான சக்தியை நமக்குக் கொடுக்கும், வாழ்க்கையை வடிவமைத்து உருவாக்குவதற்கான ஆற்றலை நமக்குக் கொடுக்கும். நம் விருப்பப்படி மூளையை எப்படி வடிவமைக்க வேண்டும், வாழ்நாளை எப்படி நீட்டிக்க வேண்டும், எண்ணங்களை எப்படி விரட்டியடிக்க வேண்டும் என்பதை

நாம் கற்றுக் கொள்வோம். இவற்றின் பின்விளைவுகள் என்னவாக இருக்கும் என்பது யாருக்கும் தெரியாது. கருவிகளை அறிவார்ந்த விதத்தில் பயன்படுத்துவதைவிட, அவற்றைக் கண்டுபிடிப்பதில்தான் மக்கள் எப்போதும் சிறந்து விளங்கினர். ஓர் அணையைக் கட்டுவதால் சூழலியல் அமைப்புமுறைக்கு ஏற்படக்கூடிய சிக்கலான பாதிப்புகளைக் கணிப்பதைவிட, வெறுமனே ஓர் அணையைக் கட்டுவதன் மூலம் ஓர் ஆற்றின் ஓட்டத்தை நம் விருப்பத்திற்கு வளைப்பது நமக்கு அதிக எளிதாக இருக்கிறது. அதேபோல, நம்முடைய மனத்தின் ஓட்டத்தைக் கட்டுப்படுத்துவது நம்முடைய தனிப்பட்ட உளவியல்மீதும் நம்முடைய சமுதாய அமைப்புமுறைகள்மீதும் எந்த வகையான தாக்கத்தை ஏற்படுத்தும் என்பதைக் கணிப்பதைவிட, வெறுமனே அந்த ஓட்டத்தை நம் விருப்பப்படி திசை திருப்புவது அதிக எளிதாக இருக்கும்.

கடந்தகாலத்தில், நம்மைச் சூழ்ந்துள்ள உலகத்தை நம் விருப்பப்படி இயங்கச் செய்வதற்கும், இந்த ஒட்டுமொத்த பூமியையும் மறுவடிவமைப்பு செய்வதற்குமான சக்தியை நாம் கைவசப்படுத்தினோம். ஆனால், உலகளாவிய சூழலியலின் சிக்கலான அம்சங்களை நாம் புரிந்து கொள்ளவில்லை என்பதால், நாம் உருவாக்கிய மாற்றங்கள் நமக்கே தெரியாமல் ஒட்டுமொத்தச் சூழலியல் அமைப்புமுறையையும் சீர்குலைத்தன. அதன் விளைவாக, நாம் இப்போது ஒரு சூழலியல் நிலைகுலைவை எதிர்கொண்டுள்ளோம். வரும் நூற்றாண்டில், நமக்குள் இருக்கின்ற உலகத்தை நம் விருப்பப்படி இயக்குவதற்கும் நம்மை நாமே மறுவடிவமைப்பு செய்வதற்குமான சக்தியை உயிர்தொழில்நுட்பமும் தகவல் தொழில்நுட்பமும் நமக்குக் கொடுக்கும். ஆனால், நம்முடைய சொந்த மனங்களின் சிக்கலான அம்சங்களை நாம் இன்னும் புரிந்து கொள்ளவில்லை என்பதால், நாம் ஏற்படுத்தவிருக்கின்ற மாற்றம் நம்முடைய மன அமைப்புமுறையைச் சீர்குலைத்து, அதை ஒட்டுமொத்தமாக நிலைகுலையச் செய்யக்கூடும்.

தகவல் தொழில்நுட்பத்திலும் உயிர்தொழில்நுட்பத்திலும் புரட்சிகள் ஏற்படுத்தியுள்ளவர்கள் பொறியாளர்களும் தொழில்முனைவோரும் அறிவியலறிஞர்களுமே. ஆனால், அவர்கள் அனைவரும், தங்களுடைய தீர்மானங்கள் அரசியல்மீது ஏற்படுத்துகின்ற தாக்கங்களை அறியாதவர்களாகவும், யாரையும் பிரதிநுதப்படுத்தாதவர்களாகவும் இருக்கின்றனர். நாடாளுமன்றங்களும் கட்சிகளும் விஷயங்களைத் தங்கள் கைகளில் எடுத்துக் கொள்ளலாமா? தற்சமயம் நிலைமை அப்படி

இருப்பதாகத் தெரியவில்லை. தொழில்நுட்பச் சீர்குலைவுப் பிரச்சனை அரசியல்வாதிகளின் முன்னுரிமைகளில் ஒன்றாக இல்லை. எனவே, 2016 ஆம் ஆண்டில் நிகழ்ந்த அமெரிக்க அதிபர் தேர்தலின்போது, ஹிலாரி கிளிண்டனின் மின்னஞ்சல் சர்ச்சைதான் சீர்குலைக்கும் தொழில்நுட்பம் தொடர்பான முக்கிய விவாதப் பொருளாக இருந்தது. வேலை இழப்புகளைப் பற்றிய பேச்சு ஒருபுறம் நிகழ்ந்தபோதிலும், இயந்திரமயமாக்கத்தின் தீவிரத் தாக்கத்தைப் பற்றி இரண்டு வேட்பாளர்களுமே பேசவில்லை. மெக்சிகர்களும் சீனர்களும் அமெரிக்கர்களின் வேலைகளைப் பறித்துக் கொள்வர் என்றும், அதனால் மெக்சிகோவின் எல்லையில் ஒரு தடுப்புச் சுவர் எழுப்பப்பட வேண்டும் என்றும் அமெரிக்க வாக்காளர்களை எச்சரித்த டொனால்டு டிரம்ப், படிமுறைத் தீர்வுகள் அவர்களுடைய வேலைகளைப் பறித்துக் கொள்ளும் என்று அவர்களை எச்சரிக்கவுமில்லை, சிலிக்கான் பள்ளத்தாக்கு இருக்கின்ற கலிபோர்னியாவின் எல்லையில் ஒரு பாதுகாப்பு அரண் கட்டப்பட வேண்டும் என்று பரிந்துரைக்கவும் இல்லை.

தாராளவாத மேற்கத்திய உலகின் முக்கியப் பகுதிகளில் வாக்காளர்கள்கூட தாராளவாதப் புனைகதையின்மீதும் ஜனநாயகச் செயல்முறையின்மீதும் நம்பிக்கை இழந்து கொண்டிருப்பதற்கான காரணங்களில் அதுவும் ஒன்றாக இருக்கக்கூடும். செயற்கை நுண்ணறிவையும் உயிர்தொழில்நுட்பத்தையும் பற்றிச் சாதாரண மக்களால் புரிந்து கொள்ள முடியாமல் போகக்கூடும், ஆனால் எதிர்காலம் தங்களைக் கடந்து சென்று கொண்டிருக்கிறது என்பதை அவர்களால் நிச்சயமாக உணர்ந்து கொள்ள முடியும். 1938 ஆம் ஆண்டில் சோவியத் ஒன்றியத்திலும் ஜெர்மனியிலும் அமெரிக்காவிலும் ஒரு சாதாரண மனிதனின் நிலைமை மிக அவலமானதாக இருந்திருக்கக்கூடும். ஆனால், உலகிலேயே மிக முக்கியமானவன் அவன்தான் என்றும், எதிர்காலமே அவன்தான் என்றும் தொடர்ந்து அவனிடம் கூறப்பட்டது (ஆனால் அவன் ஒரு 'சாதாரண' மனிதனாக இருக்க வேண்டும், ஒரு யூதனாகவோ அல்லது ஓர் ஆப்பிரிக்கனாகவோ இருக்கக்கூடாது என்பது இதில் நேரடியாகச் சொல்லப்படாமல் விடப்பட்ட விஷயம்). அவன் பிரச்சாரச் சுவரொட்டிகளைப் பார்த்தபோது, அவற்றில் அவன் தன்னைப் பார்த்தான். "நான் அந்தச் சுவரொட்டியில் இருக்கிறேன்! நான்தான் எதிர்காலத்தின் கதாநாயகன்!" என்று அவன் நினைத்தான். ஏனெனில், அந்தச் சுவரொட்டிகளில், நிலக்கரிச் சுரங்கத்

தொழிலாளர்கள், எஃகு ஆலைத் தொழிலாளர்கள், இல்லத்தரசிகள் ஆகியோர் கதாநாயகர்கள் மற்றும் கதாநாயகிகளின் தோரணையில் சித்தரிக்கப்பட்டிருந்தனர்.

2018 ஆம் ஆண்டில், தாங்கள் உதவாக்கரைகள் என்ற உணர்வு சாமானியர்களிடம் மேலோங்கிக் கொண்டிருக்கிறது. உலகமயமாக்கம், எண்மப் பரிவர்த்தனைப் பதிவேட்டுப் பிணையம், மரபுப் பொறியியல், செயற்கை நுண்ணறிவு, இயந்திரக் கற்றல் போன்ற ஏராளமான புதிரான சொற்கள் 'டெட்' சொற்பொழிவுகளிலும் அரசாங்கச் சிந்தனையாளர் குழுக்களிலும் உயர்தொழில்நுட்பக் கருத்தரங்குகளிலும் உற்சாகமாக முழங்கப்படுகின்றன. இவற்றில் எதுவும் தங்களைப் பற்றியது அல்ல என்று சாமானியர்கள் கருதக்கூடும். தாராளவாதப் புனைகதை என்பது சாதாரண மக்களைப் பற்றியது. அப்படி இருக்கும்போது, சைபார்குகளும் ஒன்றோடொன்று பிணைக்கப்பட்டப் படிமுறைத் தீர்வுகளும் கோலோச்சுகின்ற ஓர் உலகில் அக்கதை எப்படித் தொடர்ந்து பொருத்தமானதாக இருக்க முடியும்?

இருபதாம் நூற்றாண்டில், சுரண்டலுக்கு எதிராகப் பொதுமக்கள் கிளர்ந்தெழுந்தனர். பொருளாதாரத்தில் அவர்கள் முக்கியப் பாத்திரம் வகித்ததன் காரணமாக, அரசியல் அதிகாரத்திலும் தங்களுக்குப் பங்கு வேண்டும் என்று அவர்கள் கேட்டனர். இப்போது, தாங்கள் உதவாக்கரைகளாக ஆகிவிடுவோமோ என்று சாமானியர்கள் பயப்படுகின்றனர். காலம் கடந்துவிடுவதற்கு முன்பாக, தங்களிடம்

எஞ்சியிருக்கின்ற அரசியல் அதிகாரத்தைப் பயன்படுத்திக் கொள்ள அவர்கள் துடிக்கின்றனர். பிரெக்சிட்டும் டிரம்பின் எழுச்சியும் பாரம்பரிய சோசியலிசப் புரட்சிகளுக்கு நேரெதிரான பாதையை எடுத்துக்காட்டுகின்றன. பொருளாதாரத்திற்கு இன்றியமையாதவர்களாகவும், ஆனால் அரசியல் அதிகாரமின்றி இருந்தவர்களாலுமே இரஷ்யப் புரட்சியும் சீனப் புரட்சியும் கியூபப் புரட்சியும் நிகழ்த்தப்பட்டன. 2016 ஆம் ஆண்டில், அரசியல் அதிகாரம் வாய்க்கப் பெற்ற, ஆனால் பொருளாதாரத்திற்குத் தாங்கள் பயனற்றவர்களாக ஆகிக் கொண்டிருந்ததாக பயந்த பலர்தான் டிரம்பையும் பிரெக்சிட்டையும் ஆதரித்தனர். ஒருவேளை, இருபத்தொன்றாம் நூற்றாண்டில் நிகழக்கூடிய மக்கள் புரட்சிகள், மக்களைச் சுரண்டுகின்ற, பொருளாதாரரீதியாக மிக உயர்ந்த நிலையில் உள்ள மேட்டுக்குடியினருக்கு எதிராக நடைபெறுவதற்கு பதிலாக,

இனியும் மக்களின் தேவையே இல்லாத, பொருளாதாரரீதியாக மிக உயர்ந்த நிலையில் இருக்கின்ற மேட்டுக்குடியினருக்கு எதிராக நடைபெறக்கூடும். இது தோல்வியில் முடியக்கூடிய ஒரு போராட்டமாக இருக்கக்கூடும். தாங்கள் சுரண்டப்படுவதை எதிர்த்துப் போராடுவதைவிட, தாங்கள் உதவாக்கரை நிலைக்குத் தள்ளப்படுவதை எதிர்த்துப் போராடுவது மக்களுக்கு மிகவும் கடினமாக இருக்கும்.

## தாராளவாத பீனிக்ஸ் பறவை

தாராளவாதப் புனைகதைமீதான நம்பிக்கை இழப்பு ஏற்படுவது இது முதன்முறை அல்ல. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இரண்டாம் பாதியில் இக்கதை உலக அளவில் செல்வாக்குப் பெற்ற நேரத்திலிருந்து, குறிப்பிட்டக் கால இடைவெளிகளில் பல முறை அது இத்தகைய நெருக்கடிகளை எதிர்கொண்டு அவற்றைச் சமாளித்து வந்துள்ளது. உலகமயமாக்கம் மற்றும் தாராளமயமாக்கத்தின் முதல் யுகம் முதலாம் உலகப் போரின் இரத்தக்களறியில் முடிந்தது. ஆஸ்திரிய நாட்டின் பட்டத்து இளவரசரான ஆர்ச்டியூக் பிரான்ஸ் பெர்டினான்டு சரயேவோவில் படுகொலை செய்யப்பட்டதைத் தொடர்ந்து வந்த நாட்களில், உலகின் மாபெரும் வல்லரசுகள் தாராளவாதத்தைவிட ஏகாதிபத்தியத்தில் அதிக நம்பிக்கை கொண்டிருந்தன என்பது வெளிப்படையாகத் தெரிய வந்தது. சுதந்திரமான மற்றும் அமைதியான வர்த்தகத்தின் மூலம் உலகை ஒன்றிணைப்பதற்கு பதிலாக, முரட்டுத்தனமான இராணுவ அதிகாரத்தைப் பயன்படுத்துவதன் மூலம் உலகின் பெரும்பகுதியை வெற்றி கொள்வதன்மீது அவை கவனம் செலுத்தின. ஆனாலும்கூட, பிரான்ஸ் பெர்டினான்டு படுகொலையால் ஏற்பட்ட நெருக்கடியிலிருந்து தாராளவாதம் தப்பிப் பிழைத்து, அந்தக் கொந்தளிப்பான சூழ்நிலையிலிருந்து முன்னைவிட அதிக வலிமையானதாக முளைத்தெழுந்து, ‘எல்லாப் போர்களையும் முடிவுக்குக் கொண்டுவருவதற்கான போர் இது’ என்று வாக்குறுதி வழங்கியது. அப்படுகொலை, ஏகாதிபத்தியத்திற்குக் கொடுக்கப்பட வேண்டிய கொடூரமான விலையை மனிதகுலத்திற்குப் படம் பிடித்துக் காட்டியது. அதைத் தொடர்ந்து, சுதந்திரம், அமைதி ஆகிய கொள்கைகளின் அடிப்படையில் ஒரு புதிய உலக ஒழுங்கை உருவாக்க மனிதகுலம் தயாரானது.

பிறகு ஹிட்லர் காலகட்டம் வந்தது. 1930களிலும் 1940களின் தொடக்கத்திலும், பாசிசவாதம் சிறிது காலம் மிக வலிமையானதாகவும்

எதிர்க்கப்பட முடியாததாகவும் இருந்தது. இந்த அச்சுறுத்தல் வெற்றி கொள்ளப்பட்டபோது, அது அடுத்த அச்சுறுத்தலுக்கு வழி வகுத்தது. சே குவாரா காலகட்டத்தின்போது, 1950களுக்கும் 1970களுக்கும் இடைப்பட்ட நேரத்தில், தாராளவாதம் தன்னுடைய இறுதிக் கட்டத்தை எட்டியிருந்ததைப்போலவும், எதிர்காலம் இனி கம்யூனிசவாதத்திற்குச் சொந்தமாக இருந்ததுபோலவும் தோன்றியது. ஆனால் இறுதியில் கம்யூனிசவாதம்தான் நிலை குலைந்து சரிந்தது. மக்களை வலுக்கட்டாயமாகக் கடுமையான வேலைகளுக்கு உட்படுத்திய 'குலாக்' முகாம்களைவிடப் பேரங்காடிகள் அதிக வலிமையானவை என்பது நிரூபணமானது. மிக முக்கியமாக, தாராளவாதப் புனைகதை தன்னை எதிர்த்த அனைத்தையும்விட அதிகமாக வளைந்து கொடுப்பதாகவும், அதிகச் செயல் துடிப்புக் கொண்டதாகவும் விளங்கியது. ஏகாதிபத்தியம், பாசிசவாதம், கம்யூனிசவாதம் ஆகிய அனைத்தின் சிறப்பான யோசனைகளையும் செயல் திட்டங்களையும் சுவீகரித்துக் கொண்டதன் மூலம் அது அவை அனைத்தையும் வெற்றி கொண்டது. குறிப்பாக, பச்சாதாப வட்டத்தை விரிவுபடுத்துவதையும், சுதந்திரத்தோடு கூடவே சமத்துவத்தையும் மதிக்க வேண்டும் என்பதையும் அது கம்யூனிசவாதத்திடமிருந்து கற்றுக் கொண்டது.

தொடக்கத்தில், தாராளவாதப் புனைகதை ஐரோப்பிய நடுத்தர வகுப்பு ஆண்களின் சுதந்திரங்களையும் சிறப்புச் சலுகைகளையும் பற்றி மட்டுமே முக்கிய அக்கறை கொண்டிருந்தது. பாட்டாளி வர்க்கத்து மக்கள், பெண்கள், சிறுபான்மையினர், மேற்கத்தியர் அல்லாதோர் ஆகியோரின் அவல நிலையை அது கண்டுகொள்ளவில்லை. 1918 ஆம் ஆண்டில், வெற்றி வாகை சூடிய பிரிட்டனும் பிரான்ஸும் சுதந்திரத்தைப் பற்றி உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்த நேரத்தில், உலகம் நெடுகிலும் பரவியிருந்த தம்முடைய சாம்ராஜ்ஜியங்களில் வாழ்ந்த குடிமக்களைப் பற்றி அவை சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை. எடுத்துக்காட்டாக, சுயமாகத் தீர்மானிப்பதற்கான உரிமை கேட்டுப் போராடிய இந்தியர்களுக்கு 1919 ஆம் ஆண்டில் ஜாலியன் வாலாபாக் படுகொலையின் மூலம் பிரிட்டன் பதிலளித்தது. அப்படுகொலையில், ஆயுதமின்றி ஆர்ப்பாட்டம் செய்த நூற்றுக்கணக்கான இந்தியர்களை ஆங்கிலேய வீரர்கள் சுட்டுக் கொன்றனர்.

இரண்டாம் உலகப் போர் தொடங்கியபோதுகூட, மேற்கத்திய தாராளவாதிகள் தங்களுடைய 'உலகளாவிய விழுமியங்களை'

மேற்கத்தியர் அல்லாதோரின் விஷயத்தில் செயல்படுத்துவதற்கு மிகவும் சிரமப்பட்டனர். இதன்படி, நெதர்லாந்து மக்கள் கொடூரமான நாஜி ஆதிக்கத்தின் கீழ் ஐந்தாண்டுகளாகத் துன்புற்று 1945 ஆம் ஆண்டில் அதிலிருந்து மீண்டு சுதந்திரம் பெற்றவுடன் செய்த முதல் காரியம், ஒரு இராணுவப் படையை உருவாக்கி, தங்களுடைய முன்னாள் காலனியான இந்தோனேசியாவை மீண்டும் கைப்பற்றுவதற்கு உலகின் மறுகோடிக்கு அப்படையை அனுப்பி வைத்ததுதான். 1940 ஆம் ஆண்டில் வெறும் நான்கு-நாள் சண்டைக்குப் பிறகு ஜெர்மனியிடம் சரணடைந்துவிட்ட நெதர்லாந்து, இந்தோனேசியாவின் சுதந்திரத்தை ஒடுக்குவதற்கு நான்கு ஆண்டுகளுக்கும் அதிகமாகச் சண்டையிட்டது. உலகம் நெடுகிலும் உள்ள பல தேசிய விடுதலை இயக்கங்கள், தாங்கள் தாராளவாதத்தின் முன்னோடிகள் என்று சுயமுழக்கமிட்ட மேற்கத்திய நாடுகள்மீது நம்பிக்கை வைப்பதற்கு பதிலாக, கம்யூனிசவாத மாஸ்கோ மற்றும் பீஜிங் பக்கம் சாய்ந்ததில் வியப்பேதும் இல்லை.

ஆனால், தாராளவாதப் புனைகதை தன்னுடைய தொடுவானத்தை மெல்ல மெல்ல விரிவுபடுத்தி, எந்த விதிவிலக்குமின்றி அனைத்து மக்களின் சுதந்திரங்களையும் உரிமைகளையும் கோட்பாட்டுரீதியாகவாவது மதிக்கத் தொடங்கியது. சுதந்திர வட்டம் விரிவடைந்ததைத் தொடர்ந்து, தாராளவாதப் புனைகதையும் கம்யூனிசவாதப் பாணியிலான மக்கள் நலத் திட்டங்களின் முக்கியத்துவத்தை உணர்ந்து கொண்டது. ஒரு வகையான சமூகப் பாதுகாப்பு வலையுடன் பிணைக்கப்பட்டாலொழிய சுதந்திரத்திற்கு அவ்வளவாக எந்த விலைமதிப்பும் இல்லை. சமூக ஜனநாயக ஆட்சியைக் கொண்ட மக்கள் நல அரசுகள் ஜனநாயகத்தையும் மனித உரிமைகளையும் அரசு நிதியுதவி சார்ந்த கல்வியுடனும் சுகாதாரத்துடனும் இணைத்தன. தீவிர முதலாளித்துவ நாடான அமெரிக்காகூட, சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கு அரசாங்கம் ஏதேனும் மக்கள் நலச் சேவைகளை வழங்கியாக வேண்டியது இன்றியமையாதது என்பதை உணர்ந்து கொண்டது.

1990களின் தொடக்கத்தில், 'வரலாற்றின் இறுதி முடிவு' என்ற கோட்பாட்டை அரசியல்வாதிகளும் சிந்தனையாளர்களும் ஒருசேரப் போற்றிப் புகழ்ந்தனர். கடந்தகாலத்தின் மிகப் பெரிய அரசியல் கேள்விகளுக்கும் பொருளாதாரக் கேள்விகளுக்கும் விடையளிக்கப்பட்டுவிட்டன என்றும், ஜனநாயகம், மனித உரிமைகள்,

கட்டற்றச் சந்தைகள், அரசு மக்கள் நலத் திட்டங்கள் ஆகியவற்றை உள்ளடக்கிய, புதுப்பிக்கப்பட்ட தாராளவாத அமைப்புமுறை மட்டுமே நடப்பில் உள்ள ஒரே அமைப்புமுறை என்றும் அவர்கள் ஆணித்தரமாக வலியுறுத்தினர். இந்த அமைப்புமுறை உலகம் நெடுகிலும் பரவி, அனைத்து முட்டுக்கட்டைகளையும் தகர்த்தெறிந்து, தேசிய எல்லைகள் அனைத்தையும் அழித்தொழித்து, மனிதகுலத்தை சுதந்திரமான ஒரே உலகளாவிய சமூகமாக மாற்றுவதற்காகத் தோற்றுவிக்கப்பட்ட ஒன்றுபோலத் தோன்றியது.

ஆனால் வரலாறு இன்னும் முடிவுக்கு வரவில்லை. பிரான்ஸ் பெர்டினான்டு கணத்தையும், ஹிட்லர் கணத்தையும், சே குவாரா கணத்தையும் தொடர்ந்து, நாம் இப்போது டிரம்ப் கணத்தை எட்டியிருப்பதை நாம் காண்கிறோம். ஆனால், இம்முறை தாராளவாதப் புனைகதையானது ஏகாதிபத்தியம், பாசிசவாதம், கம்யூனிசவாதம் போன்ற சித்தாந்தரீதியான ஓர் எதிரியை எதிர்கொண்டிருக்கவில்லை.

உலகளாவிய ஆதிக்கம், புரட்சி, விடுதலை என்று இருபதாம் நூற்றாண்டின் முக்கிய இயக்கங்கள் அனைத்தும் ஒட்டுமொத்த மனித இனத்திற்கான ஒரு முன்னோக்கைக் கொண்டிருந்தன. ஆனால், டொனால்டு டிரம்ப் அப்படி எதையும் செய்யவில்லை. இதற்கு நேரெதிரானதைத்தான் அவர் செய்தார். உலகளாவிய முன்னோக்கு ஒன்றை உருவாக்குவதோ அல்லது அதைப் பிரபலப்படுத்துவதோ அமெரிக்காவின் வேலை அல்ல என்பதுதான் அவருடைய முக்கியச் செய்தியாக இருந்தது. அதேபோல, சிதறுண்ட பிரிட்டனின் எதிர்காலத்திற்குரிய எந்தத் திட்டமும் பிரிட்டனில் உள்ள பிரெக்சிட் ஆதரவாளர்களிடம் இல்லை. ஐரோப்பாவின் எதிர்காலத்தையும் இவ்வுலகின் எதிர்காலத்தையும் பற்றிய அக்கறை அவர்களுக்கு இல்லை. டிரம்புக்கும் பிரெக்சிட்டுக்கும் வாக்களித்தவர்கள் தாராளவாத அமைப்புமுறையை ஒட்டுமொத்தமாக நிராகரிக்கவில்லை. முக்கியமாக அதன் உலகமயமாக்கல் அம்சத்தின்மீது மட்டுமே அவர்கள் நம்பிக்கை இழந்தனர். ஜனநாயகம், கட்டற்றச் சந்தைகள், மனித உரிமைகள், சமூகப் பொறுப்பு ஆகியவற்றில் அவர்கள் இன்னும் நம்பிக்கை கொண்டுள்ளனர். ஆனால் இந்த அருமையான யோசனைகள் அனைத்தும் எல்லையோடு நின்றுவிட வேண்டும் என்று அவர்கள் நினைக்கின்றனர். யார்க்ஷயரிலும் கென்டக்கியிலும் சுதந்திரமும் செழிப்பும் தொடர்ந்து நிலைத்திருக்க வேண்டுமென்றால், எல்லையில் ஒரு சுவரைக் கட்டுவது சிறப்பானதாக

இருக்கும் என்றும், அந்நியர்கள் விஷயத்தில் தாராளவாதத்திற்கு எதிரான கொள்கைகள் கடைபிடிக்கப்பட வேண்டும் என்றும் அவர்கள் நம்புகின்றனர்.

உலக அளவில் உயர்ந்து கொண்டிருக்கின்ற சீன வல்லரசு கிட்டத்தட்ட இதே போன்ற ஒரு பிம்பத்தை வழங்குகிறது. தன்னுடைய உள்நாட்டு அரசியலை தாராளமயமாக்குவது குறித்து அது எச்சரிக்கையுணர்வோடு நடந்து கொள்கிறது, ஆனால் ஏனைய உலகத்திடம் அதிக தாராளமயமான ஓர் அணுகுமுறையை அது தேர்ந்தெடுத்துள்ளது. உண்மையில், சுதந்திரமான வணிகப் பரிவர்த்தனை மற்றும் சர்வதேச ஒத்துழைப்பு என்று வரும்போது, சீன அதிபர் ஜீ ஜின்பிங் ஒபாமாவின் வழியை அடியொற்றி நடக்கின்ற ஒருவராகத் தெரிகிறார். கார்ல் மார்க்ஸ் மற்றும் லெனினின் கொள்கைகளைப் புறந்தள்ளிவிட்டு, தாராளவாத சர்வதேச ஒழுங்கைச் சீனா மகிழ்ச்சியாக சுவீகரித்துக் கொண்டுள்ளதுபோலத் தெரிகிறது.

மீண்டெழுந்துள்ள இரஷ்யா, உலகளாவிய தாராளவாத ஒழுங்கிற்கு எதிரான ஆற்றல்மிக்க ஓர் எதிரியாகத் தன்னைப் பார்க்கிறது. அது தன்னுடைய இராணுவ வலிமையை மீண்டும் கட்டியெழுப்பியுள்ளபோதிலும், சித்தாந்தரீதியாக அது திவாலாகியுள்ளது. விளாடிமிர் புதின் இரஷ்யாவிலும் உலகம் நெடுகிலுமுள்ள வலதுசாரி இயக்கங்கள் பலவற்றுக்கு இடையேயும் நிச்சயமாகப் பிரபலமாக இருக்கிறார் என்றபோதிலும், வேலையில்லா ஸ்பெயின் நாட்டவரையும் அதிருப்தியடைந்துள்ள பிரேசில் நாட்டவரையும் கற்பனையில் மிதந்து கொண்டிருக்கும் கேம்பிரிட்ஜ் மாணவர்களையும் கவர்ந்திழுக்கக்கூடிய சர்வதேச உலகக் கண்ணோட்டம் எதுவும் அவரிடம் இல்லை.

தாராளவாத ஜனநாயக அமைப்புமுறைக்கான மாற்று ஒன்றை இரஷ்யா முன்வைக்கிறது. ஆனால், இந்த அமைப்புமுறை ஓர் ஒத்திசைவான அரசியல் சித்தாந்தமாக இல்லை. மாறாக, தன்னலவாதச் ‘சிறுகுழுவினர்’ ஒரு நாட்டின் பெரும்பான்மைச் சொத்துகளையும் அதிகாரத்தையும் ஏகபோகமாக அனுபவிக்கின்ற அதே நேரத்தில், அவர்கள் தங்களுடைய நடவடிக்கைகளை மறைத்துத் தங்களுடைய ஆட்சியைத் தக்க வைத்துக் கொள்வதற்கு ஊடகங்களைக் கட்டுப்படுத்துகின்ற ஓர் அரசியல் நடைமுறை அது. “எல்லோரையும் சில காலமும், சிலரை எல்லா நேரமும் ஏமாற்றலாம், ஆனால் எல்லோரையும் எல்லா நேரமும் உங்களால் ஏமாற்ற முடியாது,” என்ற

ஆபிரகாம் லிங்கனின் கொள்கையின் அடிப்படையில் அமைந்ததுதான் ஜனநாயகம். ஓர் அரசாங்கம் ஊழல் நிறைந்ததாக இருந்து, மக்களின் வாழ்க்கையை மேம்படுத்தத் தவறினால், போதுமான மக்கள் இறுதியில் இதை உணர்ந்து கொண்டு, அந்த அரசாங்கத்தைத் தூக்கியெறிந்துவிட்டு, அதனிடத்தில் வேறோர் அரசாங்கத்தை நிலைப்படுத்துவர். ஆனால் ஊடகங்கள் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் இருக்கும்போது லிங்கனின் கருத்து வலுவிழக்கிறது. ஏனெனில், குடிமக்கள் உண்மையை உணர்ந்து கொள்வதிலிருந்து அது அவர்களைத் தடுக்கிறது. ஊடகங்கள் ஆட்சியில் இருக்கின்ற சிறுகுழுவினரின் முழுமையான கட்டுப்பாட்டில் இருப்பதால், அக்குழுவினர் தங்களுடைய தோல்விகள் அனைத்திற்கும் மற்றவர்கள்மீது பழி போடுவதற்கும், கற்பனையான அல்லது உண்மையான புற அச்சுறுத்தல்கள்மீது மக்களின் கவனத்தைத் திசை திருப்புவதற்கும் அந்த ஊடகங்களைப் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

அப்படிப்பட்ட ஒரு சிறுகுழு ஆட்சியின்கீழ் நீங்கள் வாழும்போது, சுகாதாரப் பிரச்சனை, மாசுப் பிரச்சனை போன்ற அலுப்பூட்டும் விஷயங்களைவிட அதிக முன்னுரிமை பெறுகின்ற ஏதோ ஒரு நெருக்கடி எப்போதும் இருந்து கொண்டே இருக்கிறது. ஒரு நாடு ஓர் அந்நிய நாட்டின் படையெடுப்பை எதிர்கொண்டிருந்தாலோ அல்லது ஒரு பயங்கரமான அச்சுறுத்தலை எதிர்கொண்டிருந்தாலோ, எப்போதும் அளவுக்கதிகமான கூட்டம் நிறைந்த மருத்துவமனைகளைப் பற்றியோ அல்லது மாசுபட்டுள்ள ஆறுகளைப் பற்றியோ கவலைப்படுவதற்கு யாருக்கு நேரமிருக்கிறது? தொடர்ந்து ஏதோ ஒரு நெருக்கடியை உருவாக்கிக் கொண்டிருப்பதன் மூலம், ஊழல்மிக்க ஒரு சிறுகுழு அரசாங்கத்தால் தன்னுடைய ஆட்சியைக் காலவரையறையின்றி நீட்டித்துக் கொண்டே போக முடியும்.

இந்தத் தன்னலவாதச் சிறுகுழு ஆட்சி நடைமுறையில் தொடர்ந்து நீடித்தாலும், இது யாரையும் கவரவில்லை. தம்முடைய முன்னோக்கைப் பெருமிதத்துடன் விவரித்துக் கூறுகின்ற பிற சித்தாந்தங்களைப் போலன்றி, இங்கு இயங்கிக் கொண்டிருக்கின்ற சிறுகுழு ஆட்சிகள் தம்முடைய வழக்கங்கள் குறித்துப் பெருமிதம் கொள்வதில்லை. மேலும், அவை பிற சித்தாந்தங்களை ஒரு புகைத்திரையைப்போலப் பயன்படுத்துகின்றன. இவ்விதத்தில், இரஷ்யா தான் ஒரு ஜனநாயக நாடு என்பதுபோலப் பாசாங்கு செய்கிறது. அதன் தலைமைத்துவம், சிறுகுழு ஆட்சியைவிட இரஷ்ய தேசியவாதத்தின் விழுமியங்கள்மீதும் வைதிகக்

கிறித்தவத்தின் விழுமியங்கள்மீதும் தாங்கள் நம்பிக்கை கொண்டிருப்பதாக முழங்குகிறது. பிரான்ஸ் மற்றும் பிரிட்டனில் உள்ள தீவிர வலதுசாரிகள் இரஷ்யாவின் உதவியைச் சார்ந்திருக்கக்கூடும், புதின்மீது தாங்கள் கொண்டிருக்கும் அபிமானத்தை வெளிப்படுத்தக்கூடும், ஆனால் அவர்களுடைய வாக்காளர்கள்கூட இரஷ்ய மாதிரியை அப்படியே நகலெடுக்கின்ற ஒரு நாட்டில் வாழ விரும்ப மாட்டார்கள். புரையோடி இருக்கின்ற ஊழல், சரிவர இயங்காத சேவைகள், சட்டவிதியின்மை, அச்சுறுத்தும் சமத்துவமின்மை ஆகியவற்றை உள்ளடக்கிய ஒரு நாட்டில் வாழ யார்தான் விரும்புவார்கள்? சில அளவீடுகளின்படி, உலகில் மிக மோசமான அளவு சமத்துவமின்மை நிலவுகின்ற நாடுகளில் இரஷ்யாவும் ஒன்று. அந்நாட்டில் 87 விழுக்காடு செல்வம் பணக்காரர்களான 10 விழுக்காடு மக்களின் கைகளில் இருக்கிறது. பிரான்ஸில் தேசிய முன்னணிக் கட்சியின் ஆதரவாளர்களில் பாட்டாளி வர்க்கத்தினர் எத்தனைப் பேர் இரஷ்யாவின் செல்வ விநியோக அமைப்புமுறையை பிரான்ஸில் நடைமுறைப்படுத்த விரும்புவார்கள்?

மக்கள் தாங்கள் இருக்கும் இடத்தைவிட மேம்பட்ட ஓரிடத்திற்குக் குடிபெயரவே விரும்புவர். உலகம் நெடுகிலும் நான் மேற்கொண்டுள்ள பயணங்களில், அமெரிக்கா, ஜெர்மனி, கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளுக்குக் குடிபெயர விரும்புகின்ற எண்ணற்ற மக்களைப் பல நாடுகளில் நான் சந்தித்திருக்கிறேன். சீனாவுக்கும் ஜப்பானுக்கும் இடம் பெயர விரும்புகின்ற ஒருசில நபர்களையும் நான் சந்தித்துள்ளேன். ஆனால், இரஷ்யாவில் குடியேறுவது குறித்துக் கனவு கண்டு கொண்டிருக்கின்ற ஒருவரைக்கூட நான் இதுவரை சந்தித்ததில்லை.

'உலகளாவிய இஸ்லாம்' என்பதைப் பொறுத்தவரை, அதன் மடியில் பிறந்தவர்களை மட்டுமே அது கவர்ந்திழுக்கிறது. சிரியா, ஈராக் ஆகிய நாடுகளைச் சேர்ந்த சிலருக்கு இது வசீகரமானதாக இருக்கக்கூடும்; ஜெர்மனியிலும் பிரிட்டனிலும் உள்ள, ஒதுக்கப்பட்ட இளம் இஸ்லாமியர்களைக்கூட இது கவரக்கூடும். ஆனால், கிரேக்கம், தென்னாப்பிரிக்கா, கனடா, தென் கொரியா போன்ற நாடுகள் தம்முடைய பிரச்சனைகளுக்குத் தீர்வு காண்பதற்கு ஓர் உலகளாவிய இஸ்லாமிய இயக்கத்துடன் இணைந்து கொள்வதைப் பற்றி நம்மால் நினைத்துப் பார்க்கக்கூட முடியாது. இஸ்லாமிய சமயச் சார்பு ஆட்சி நடைபெறுகின்ற ஒரு மத்தியக் கிழக்கு நாட்டில் வாழ விரும்பி

தாராளவாத ஜெர்மனியிலிருந்து அங்கு செல்கின்ற ஒவ்வோர் இஸ்லாமிய இளைஞனுக்கும், தாராளவாத ஜெர்மனியில் தங்களுக்கென்று ஒரு புதிய வாழ்க்கையைத் தொடங்குவதற்கு அந்த மத்தியக் கிழக்கு நாட்டிலிருந்து ஜெர்மனியை நோக்கிப் புறப்பட்டு வர ஒரு நூறு இளைஞர்களாவது காத்திருப்பர்.

சித்தாந்தங்கள்மீது இதற்கு முன்பும் நம்பிக்கை இழப்பு ஏற்பட்டிருந்தபோதிலும், இப்போது அதன் தீவிரம் குறைந்திருக்கிறது என்று இதை அர்த்தப்படுத்திக் கொள்ள முடியும். கடந்த ஒருசில ஆண்டுகளில் நிகழ்ந்த சம்பவங்களால் முற்றிலும் மனம் தளர்ந்து நம்பிக்கை இழந்து போயிருக்கும் எந்தவொரு தாராளவாதியும், 1918, 1938, மற்றும் 1968 ஆம் ஆண்டுகளில் விஷயங்கள் எவ்வளவு அதிக மோசமாகத் தெரிந்தன என்பதை நினைவுகூர்ந்து பார்க்க வேண்டும். எல்லாவற்றையும் கருத்தில் கொள்ளும்போது, மனிதகுலம் தாராளவாதக் கதையை முற்றிலுமாகக் கைவிடாது என்பது தெரிகிறது. ஏனெனில், அதற்கு வேறு எந்த மாற்றும் இப்போது அதனிடம் இல்லை. மக்கள் தாராளவாத அமைப்புமுறையைக் கோபத்தோடு எட்டி உதைக்கக்கூடும், ஆனால் அவர்களுக்கு வேறு போக்கிடம் ஏதும் இல்லாததால், இறுதியில் அவர்கள் அதனிடமே திரும்பி வந்துவிடுவர்.

இதற்கு மாறாக இன்னொரு விஷயமும் நடக்கக்கூடும். உலகளாவிய புனைகதைகள் எல்லாவற்றையும் முற்றிலுமாகக் கைவிட்டுவிட்டு, அதற்கு பதிலாக, உள்ளூர் தேசியவாதப் புனைகதைகள் மற்றும் மதரீதியான புனைகதைகளிடம் மக்கள் தஞ்சம் புகக்கூடும். இருபதாம் நூற்றாண்டில், தேசியவாத இயக்கங்கள் அரசியலில் மிக முக்கியப் பங்கு வகித்தன, ஆனால் உலகத்தைத் தனித்தனி நாடுகளாகப் பிரிப்பதற்கு ஆதரவளித்ததைத் தவிர, உலகின் எதிர்காலத்திற்கான ஓர் ஒருங்கிணைந்த முன்னோக்கு எதுவும் அவற்றிடம் இருக்கவில்லை. எனவே, இந்தோனேசிய தேசியவாதிகள் டச்சு ஆதிக்கத்திற்கு எதிராகப் போராடினர், வியட்நாமிய தேசியவாதிகள் ஒரு சுதந்திர வியட்நாமை விரும்பினர், ஆனால் ஒட்டுமொத்த மனிதகுலத்திற்கு அங்கு எந்தவோர் இந்தோனேசியக் கதையோ அல்லது வியட்நாமியக் கதையோ இருக்கவில்லை. இந்தோனேசியா, வியட்நாம் மற்றும் பிற சுதந்திர நாடுகள் அனைத்தும் எப்படி ஒன்றோடொன்று தம்மைத் தொடர்புபடுத்திப் பார்க்க வேண்டும் என்பதையும், அணுவாயுதப் போர் அச்சுறுத்தல் போன்ற உலகளாவிய பிரச்சனைகளை மனிதர்கள்

எவ்வாறு கையாள வேண்டும் என்பதையும் விளக்குவதற்கான நேரம் வந்தபோது, தேசியவாதிகள் தாராளவாத யோசனைகள் பக்கமோ அல்லது கம்யூனிசவாத யோசனைகள் பக்கமோ திரும்பினர்.

ஆனால், இப்போது தாராளவாதமும் கம்யூனிசவாதமும் மதிப்பிழந்து போயிருப்பதால், ஒரே உலகளாவிய புனைகதை என்ற யோசனையையே மக்கள் ஒட்டுமொத்தமாகப் புறக்கணிக்க வேண்டுமா? கம்யூனிசவாதம் உட்பட இந்த உலகளாவிய புனைகதைகள் அனைத்தும் மேற்கத்திய ஏகாதிபத்தியத்தின் விளைவாக உருவானவைதானே? ஜெர்மனியிலுள்ள டிரியர் நகரத்தில் வாழும் ஒரு ஜெர்மானியரின் புதுமையான கருத்துகள்மீதோ அல்லது இங்கிலாந்திலுள்ள மான்செஸ்டர் நகரத் தொழிலதிபர் ஒருவருடைய புதுமையான யோசனைகள்மீதோ வியட்நாம் கிராமவாசிகள் ஏன் விசுவாசம் கொள்ள வேண்டும்? ஒருவேளை, ஒவ்வொரு நாடும் தன்னுடைய பண்டைய பாரம்பரியங்களின் அடிப்படையில் வரையறுக்கப்பட்ட ஒரு சொந்தப் பாதையை சுவீகரித்துக் கொள்ள வேண்டுமோ? ஒரு மாற்றத்திற்கு, மேற்கத்தியர்கள் இந்த ஒட்டுமொத்த உலகத்தைக் கட்டுப்படுத்தி இயக்க முயற்சிப்பதிலிருந்து ஓர் இடைவேளை எடுத்துக் கொண்டு, தங்கள் சொந்த விவகாரங்கள்மீது கவனம் செலுத்த வேண்டுமோ?

சான்றுகளின் அடிப்படையில் பார்க்கும்போது, உலகம் நெடுகிலும் இதுதான் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஏனெனில், தாராளவாதத்தின் நிலைகுலைவு விட்டுச் சென்ற வெற்றிடத்தை உள்நாட்டின் ஏதோ கற்பனையான கடந்தகாலப் பொற்காலம் பற்றிய பழைய நினைவுகள் தற்காலிகமாகப் பிடித்துக் கொண்டுள்ளன. அமெரிக்கா இனி வெளிநாட்டு விவகாரங்களில் தலையிடாது என்ற கொள்கை வகுக்கப்படுவதற்கு அறைகூவல் விடுத்த டொனால்டு டிரம்ப், ‘அமெரிக்காவை மீண்டும் மகத்தானதாக்குவோம்’ என்ற வாக்குறுதியையும் மக்களுக்கு வழங்கினார். 1950களிலும் 1980களிலும் அமெரிக்கச் சமுதாயம் மிகவும் கச்சிதமானதாக இருந்தது என்ற நினைப்பில், இருபத்தொன்றாம் நூற்றாண்டில் மீண்டும் அத்தகைய சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்று அவர் அவ்வாறு முழங்கினார்போலும்! பிரெக்சிட் ஆதரவாளர்கள் தாங்கள் இன்னும் பேரரசி விக்டோரியாவின் காலகட்டத்தில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற நினைப்பில் பிரிட்டனை ஒரு சுதந்திரமான வல்லரசாக உருவாக்குவதற்குக் கனவு கண்டு கொண்டிருக்கின்றனர். புவி வெப்பமடைந்து கொண்டிருக்கின்ற, இணையத்தளம்

கோலோச்சுகின்ற இந்த யுகத்தில் இவ்வாறு பிரிந்து செல்வது சாத்தியமான கொள்கை என்று அவர்கள் கனவு கண்டு கொண்டிருக்கின்றனர். சீன மேட்டுக்குடியினர், மேற்கிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட, சந்தேகத்திற்கிடமான மார்க்சிய சித்தாந்தத்திற்குக் கூடுதல் உதவியாகவோ அல்லது மாற்றாகவோ தங்களுடைய பாரம்பரிய ஏகாதிபத்தியத்தையும் கன்பூசியக் கொள்கைகளையும் மீண்டும் சுவீகரித்துக் கொண்டுள்ளனர். இரஷ்யாவில், ஊழல்மிக்க ஒரு சிறுகுழு ஆட்சியை நிலைப்படுத்துவது விளாடிமிர் புதினின் அதிகாரபூர்வமான முன்னோக்கு அல்ல; மாறாக, பழைய 'ஜார்' மன்னராட்சியை மீண்டும் கட்டியெழுப்புவதுதான் அவருடைய முன்னோக்காக இருக்கிறது. போல்ஷெவிக் புரட்சி நிகழ்ந்து ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு, பால்டிக் பகுதியிலிருந்து காக்கசஸ் மலைத்தொடர்வரை அதிகாரம் செலுத்துகின்ற, இரஷ்ய தேசியவாதம் மற்றும் சமயப் பற்றின் உதவியுடன்கூடிய ஓர் எதேச்சாதிகார அரசாங்கத்தின் மூலம் பண்டைய ஜார் மன்னராட்சிக் காலத்துப் புகழை மீட்டெடுக்கப் போவதாகப் புதின் உறுதி கூறுகிறார்.

தேசியவாதப் பற்றை மதப் பாரம்பரியங்களோடு பிணைக்கின்ற இந்த வகையான பழம்பெரும் கனவுகள், இந்தியா, போலந்து, துருக்கி, மற்றும் எண்ணற்றப் பிற நாடுகளில் உள்ள ஆட்சிகளின் அடித்தளங்களாக அமைந்துள்ளன. இந்தக் கற்பனைக் கதைகள் வேறு எந்தப் பகுதியையும்விட மத்தியக் கிழக்கில் அதிகத் தீவிரமானவையாக இருக்கின்றன. 1,400 ஆண்டுகளுக்கு முன்பு மதீனா நகரத்தில் முகம்மது நபியால் நிறுவப்பட்ட அமைப்புமுறையை மத்தியக் கிழக்கிலுள்ள இஸ்லாமியவாதிகள் நகலெடுக்க விரும்புகின்றனர். அதே நேரத்தில், இஸ்ரேலில் உள்ள யூத அடிப்படைவாதிகள் இஸ்லாமியவாதிகளையும் விஞ்சிவிடுகின்றனர். அவர்கள் 2,500 ஆண்டுகளுக்கு முந்தைய பைபிள் காலத்திற்குத் திரும்பிச் செல்வதைப் பற்றிக் கனவு காண்கின்றனர். இஸ்ரேலின் கூட்டணி அரசின் உறுப்பினர்கள் நவீன இஸ்ரேலின் எல்லைகள் பைபிள் காலத்து இஸ்ரேலின் எல்லைகளைப் பெரிதும் ஒத்திருக்கும்படி விரிவுபடுத்துவது குறித்தும், பைபிள் சட்டவிதிகளை மீண்டும் நிலைப்படுத்துவது குறித்தும், ஜெருசலேம் நகரில் உள்ள அல்-அக்சா மசூதி இருக்கும் இடத்தில் தங்களுடைய பண்டைய 'யாவே' கோவிலை மீண்டும் கட்டியெழுப்புவது குறித்தும் வெளிப்படையாகப் பேசுகின்றனர்.

இந்த நடவடிக்கைகள் அனைத்தையும் கண்டு தாராளவாத மேட்டுக்குடியினர் பீதியடைந்துள்ளனர். பேரழிவைத் தவிர்ப்பதற்கு மனிதகுலம் சரியான நேரத்தில் மீண்டும் தாராளவாதப் பாதைக்குத் திரும்பி வந்துவிடும் என்று அவர்கள் நம்புகின்றனர். 2016 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில், அமெரிக்க முன்னாள் அதிபர் ஒபாமா, ஐக்கிய நாடுகள் சபையில் ஆற்றிய தன்னுடைய கடைசி உரையில், "நாடு, பழங்குடி, இனம், மதம் ஆகிய பண்டைய வழிகளில் தீவிரமாகப் பிளவுபடுத்தப்பட்டு, இறுதியில் சச்சரவுக்கு உள்ளாகியிருக்கும் ஓர் உலகிற்குள் மீண்டும் திரும்பிச் சென்றுவிடாதீர்கள்," என்று எச்சரிக்கை விடுத்ததோடு, "மாறாக, திறந்தவெளிச் சந்தைகள், பொறுப்புடன்கூடிய நிர்வாகம், ஜனநாயகம், மனித உரிமைகள், சர்வதேசச் சட்டங்கள் ஆகிய கொள்கைகள்தாம் இந்த நூற்றாண்டில் மனிதகுலத்தின் முன்னேற்றத்திற்கான உறுதியான அடித்தளமாக நீடிக்கின்றன," என்று கூறினார்.

தாராளவாத அமைப்புமுறையில் எண்ணற்றக் குறைபாடுகள் இருந்தாலும், அதன் மற்ற மாற்றுகள் எதுவொன்றையும்விட அது அதிக நன்மை பயப்பதாக இருந்து வந்துள்ளது என்று ஒபாமா சரியாகச் சுட்டிக்காட்டியுள்ளார். பெரும்பாலான மக்கள், இருபத்தொன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தாராளவாத ஒழுங்கின் பாதுகாப்பின் கீழ் அனுபவித்த அளவுக்குச் செழிப்பையும் அமைதியையும் வேறு எந்தவோர் அமைப்புமுறையின் கீழும் அனுபவிக்கவில்லை. வரலாற்றில் முதன்முறையாக, முதுமையால் இறக்கின்றவர்களின் எண்ணிக்கையைவிடத் தொற்றுநோயால் இறக்கின்றவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருக்கிறது, அளவுக்கதிகமான உடற்பருமனால் இறக்கின்றவர்களின் எண்ணிக்கையைவிடப் பஞ்சத்தால் இறக்கின்றவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருக்கிறது, விபத்துகளால் இறக்கின்றவர்களின் எண்ணிக்கையைவிட வன்முறையால் இறக்கின்றவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவாக இருக்கிறது.

ஆனால், நாம் எதிர்கொண்டுள்ள சூழலியல் நிலைகுலைவு, தொழில்நுட்பச் சீர்குலைவு போன்ற பெரிய பிரச்சனைகளுக்கான வெளிப்படையான தீர்வுகள் எதுவும் தாராளவாதத்திடம் இல்லை. கடினமான சமூகப் பிரச்சனைகளையும் அரசியல் சச்சரவுகளையும் மாயாஜாலமாகத் தீர்ப்பதற்கு தாராளவாதம் பாரம்பரியமாகப்

பொருளாதார வளர்ச்சியைச் சார்ந்திருந்தது. தாராளவாதம் பாட்டாளி வர்க்கத்தினருக்கும் நிலச்சுவான்தார்களுக்கும் இடையேயும், ஆத்திகர்களுக்கும் நாத்திகர்களுக்கும் இடையேயும், உள்ளூர்வாசிகளுக்கும் புலம் பெயர்ந்து வந்தவர்களுக்கும் இடையேயும், ஐரோப்பியர்களுக்கும் ஆசியர்களுக்கும் இடையேயும் சமரசத்தை ஏற்படுத்தியது. எல்லோருக்கும் தற்போது கிடைத்துக் கொண்டிருக்கும் உணவுக் கவளத்தைவிட இனி அதிகமாகக் கிடைக்கும் என்று அவர்கள் ஒவ்வொருவருக்கும் உறுதி வழங்கியதன் மூலம் தாராளவாதம் அதைச் சாதித்தது. பொருளாதாரம் தொடர்ந்து வளர்ச்சியடையும்போது அது சாத்தியம்தான். ஆனால், பொருளாதார வளர்ச்சி உலகளாவிய சூழல் மண்டலத்தைப் பாதுகாக்காது. உண்மையில், சூழலியல் நெருக்கடிக்குக் காரணமே இந்தப் பொருளாதார வளர்ச்சிதான். பொருளாதார வளர்ச்சியானது தொழில்நுட்பச் சீர்குலைவையும் தீர்க்காது. ஏனெனில், சீர்குலைவை ஏற்படுத்தும் தொழில்நுட்பங்கள் அதிக அளவில் கண்டுபிடிக்கப்படுவதுதான் பொருளாதார வளர்ச்சியின் அடித்தளமாக இருக்கிறது.

தாராளவாதப் புனைகதையும் கட்டற்றச் சந்தைமுறை முதலாளித்துவத்தின் தர்க்கமும் பிரம்மாண்டமான எதிர்பார்ப்புகளைக் கொள்ளும்படி மக்களை ஊக்குவிக்கின்றன. இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், ஒவ்வொரு தலைமுறையினரும் - அவர்கள் ஹூஸ்டனில் இருந்தாலும் சரி, அல்லது ஷாங்காய், இஸ்தான்புல், அல்லது சாவோ பாலோவில் இருந்தாலும் சரி - தங்களுடைய முந்தைய தலைமுறையினரைவிட அதிகச் சிறப்பான கல்வியைப் பெற்றனர், மேம்பட்ட உடல்நலப் பாதுகாப்பு வசதிகள் கிடைக்கப் பெற்றனர், முந்தைய தலைமுறைகளைவிட அதிக வருவாய் ஈட்டினர். ஆனால், இனி வரும் காலங்களில், தொழில்நுட்பச் சீர்குலைவு மற்றும் சூழலியல் சீர்குலைவின் காரணமாக இளைய தலைமுறையினர் தாங்கள் வெறுமனே உயிர் பிழைத்திருப்பதையே தங்களுடைய அதிர்ஷ்டமாகக் கருத வேண்டியிருக்கும்.

இதன் விளைவாக, இவ்வுலகிற்காக, மேம்படுத்தப்பட்ட ஒரு புதிய புனைகதையை உருவாக்கும் வேலை நம் தலையில் விடிந்துள்ளது. தொழில் புரட்சியின் எழுச்சி இருபதாம் நூற்றாண்டின் நவீனச் சித்தாந்தங்களைத் தோற்றுவித்ததைப்போலவே, உயிர்தொழில்நுட்பத்திலும் தகவல் தொழில்நுட்பத்திலும் இனி

வரவிருக்கின்ற புரட்சிகளுக்குப் புதிய முன்னோக்குகள் தேவைப்படுவதற்கான சாத்தியம் அதிகம் உள்ளது. எனவே, அடுத்த சில பத்தாண்டுகள், தீவிரச் சிந்தனையையும் புதிய சமூக மாதிரிகள் மற்றும் அரசியல் மாதிரிகளின் உருவாக்கத்தையும் உள்ளடக்கியவையாக இருக்கும். 1930களிலும் 1960களிலும் ஏற்பட்ட நெருக்கடிகளைத் தொடர்ந்து நிகழ்ந்ததைப்போல இப்போதும் தாராளவாதத்தால் தன்னை மீண்டும் புதுப்பித்துக் கொள்ள முடியுமா? முன்பு எப்போதையும்விட அதிக வசீகரமாக அதனால் தலைதூக்க முடியுமா? தாராளவாதிகளுக்குத் தோன்றாத விடைகளைப் பாரம்பரிய மதத்தாலும் தேசியவாதத்தாலும் வழங்க முடியுமா? பண்டைய ஞானத்தைப் பயன்படுத்தி இன்றைய நிலவரப்படியான உலகக் கண்ணோட்டத்தை அவற்றால் உருவாக்க முடியுமா? அல்லது, கடந்தகாலத்துடனான தொடர்பை முற்றிலுமாகத் துண்டித்துவிட்டு, பழைய கடவுளரையும் நாடுகளையும் மட்டுமல்லாமல் சுதந்திரம், சமத்துவம் ஆகிய நவீன மைய விழுமியங்களையும் தாண்டி அவற்றுக்கு அப்பால் செல்லக்கூடிய, முற்றிலும் புதியதொரு கதையைப் புனைவதற்கான நேரம் வந்துவிட்டதா?

தற்போது, மனிதகுலம் இக்கேள்விகள் குறித்து ஓர் ஒருமித்தக் கருத்தை எட்டுவதற்கு இன்னும் வெகுகாலம் ஆகும். நாம் இன்னும் ஏமாற்றத்தையும் கோபத்தையும் உள்ளடக்கிய ஒரு விரக்திக் கணத்தில் இருக்கிறோம். மக்கள் பழைய புனைகதைகளில் நம்பிக்கை இழந்துள்ளதற்கும், ஒரு புதிய புனைகதையை ஏற்றுக் கொள்வதற்கும் இடைப்பட்டக் கணம் அது. அப்படியானால், அடுத்து என்ன செய்யப்பட வேண்டும்? முதலில், உலகத்தின் அழிவுக்கான நாள் குறிக்கப்பட்டுவிட்டது என்ற தீர்க்கதரிசன முழக்கங்களின் தீவிரத்தை நாம் குறைக்க வேண்டும், நாம் பீதியடைவதற்கு பதிலாகக் குழப்பமடைய வேண்டும். ஏனெனில், பீதி என்பது ஒரு வகையான இறுமாப்பு. உலகம் எங்கே சென்று கொண்டிருக்கிறது என்பதை நான் துல்லியமாக அறிவேன், அதாவது, அது அதலபாதாளத்தை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும் என்ற அகங்கார உணர்வு அது. குழப்பம் அதைவிட அதிகப் பணிவானது. ஏனெனில், நம்முடைய நிலைமை குறித்துத் தெளிவாகச் சிந்திக்க அது நம்மைத் தூண்டுகிறது. “உலகம் அழியப் போகிறது!” என்று கத்திக் கொண்டு தெருவில் ஓட வேண்டும்போல உங்களுக்குத் தோன்றினால், “இல்லை, அது உண்மையல்ல. உலகில் என்ன நிகழ்ந்து

கொண்டிருக்கிறது என்பது எனக்குப் புரியவில்லை என்பதுதான் உண்மை," என்று உங்களிடம் நீங்களே கூறிக் கொள்ள முயற்சி செய்யுங்கள்.

இந்நூலில் இனி வரும் அத்தியாயங்கள், நாம் எதிர்கொண்டுள்ள திகைப்பூட்டும் புதிய சாத்தியக்கூறுகள் சிலவற்றையும், நாம் இந்நிலையிலிருந்து இனி எப்படி நடந்து கொள்ளக்கூடும் என்பதையும் தெளிவுபடுத்த முயற்சிக்கின்றன. மனிதகுலத்தின் இக்கட்டான சூழ்நிலைகளுக்கான தீர்வுகளை ஆய்வு செய்யத் தொடங்குவதற்கு முன்பாக, தொழில்நுட்பம் தோற்றுவிக்கக்கூடிய சவால்களை நாம் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும். தகவல் தொழில்நுட்பத்திலும் உயிர்தொழில்நுட்பத்திலும் ஏற்பட்டுள்ள புரட்சிகள் இன்னும் தொடக்க நிலையில்தான் உள்ளன. தற்போதைய தாராளவாத நெருக்கடிக்கு அவை உண்மையில் எந்த அளவுக்குப் பொறுப்பு என்பது விவாதத்திற்கு உரிய ஒன்று. பிர்மிங்காம், இஸ்தான்புல், செயின்ட் பீட்டர்ஸ்பர்க், மும்பை ஆகிய நகரங்களில் உள்ள மக்களில் பெரும்பாலானோர், செயற்கை நுண்ணறிவின் வளர்ச்சியைப் பற்றியும் அது தங்கள் வாழ்வின்மீது ஏற்படுத்தக்கூடிய தாக்கம் குறித்தும் அவ்வளவு விழிப்புணர்வு உடையவர்களாக இல்லை. எனவே, அடுத்த சில பத்தாண்டுகளில் தொழில்நுட்பப் புரட்சிகள் வேகம் பெற்று, மனிதகுலம் இதுவரை எதிர்கொண்டிராத மிகக் கடினமான சோதனைகளை நம் முன்னே வைக்கும் என்பது சந்தேகத்திற்குரியதுதான். மனிதகுலத்தின் ஆதரவைப் பெற முயற்சிக்கின்ற எந்தவொரு புனைகதையும், தகவல் தொழில்நுட்பத்திலும் உயிர்தொழில்நுட்பத்திலும் ஏற்பட்டுள்ள இரட்டைப் புரட்சிகளைக் கையாள்வதற்கு அது எவ்வளவு திறன் வாய்ந்ததாக இருக்கிறது என்பதைக் கொண்டே சோதிக்கப்படும். தாராளவாதம், தேசியவாதம், இஸ்லாம், அல்லது வேறு ஏதேனும் புதுமையான மதம் 2050 ஆம் ஆண்டின் உலகத்தை வடிவமைக்க விரும்பினால், அது செயற்கை நுண்ணறிவையும் பெருந்தரவுப் படிமுறைத் தீர்வுகளையும் உயிர்பொறியியலையும் புரிந்து கொள்ள வேண்டியதோடு கூடவே, அவற்றை ஒருங்கிணைத்து ஒரு புதிய, அர்த்தமுள்ள விவரிப்பையும் உருவாக்கியாக வேண்டும்.

இந்தத் தொழில்நுட்பச் சவாலின் இயல்பைப் புரிந்து கொள்வதற்கு, வேலை வாய்ப்புச் சந்தையிலிருந்து தொடங்குவது சிறப்பானதாக இருக்கும். 2015 ஆம் ஆண்டிலிருந்து நான் உலகம் நெடுகிலும் பயணித்து,

மனிதர்கள் எதிர்கொண்டுள்ள இக்கட்டான நிலையைப் பற்றி அரசாங்க அதிகாரிகளுடனும் தொழிலதிபர்களுடனும் சமூக ஆர்வலர்களுடனும் பள்ளிக் குழந்தைகளிடமும் பேசி வந்துள்ளேன். செயற்கை நுண்ணறிவு, பெருந்தரவுப் படிமுறைத் தீர்வுகள், உயிர்பொறியியல் ஆகியவற்றைப் பற்றிய பேச்சினால் அவர்கள் பொறுமையிழந்தாலோ அல்லது சலிப்படைந்தாலோ, மீண்டும் அவர்களுடைய கவனத்தைக் கவர்வதற்கு நான் ஒரே ஒரு மாயாஜாலச் சொல்லைப் பயன்படுத்தினால் போதும். 'வேலை' என்ற சொல்தான் அது. தொழில்நுட்பப் புரட்சி விரைவில் கோடிக்கணக்கான மக்களை வேலைவாய்ப்புச் சந்தையிலிருந்து வெளியே தள்ளிவிட்டு, ஒரு மிகப் பெரிய, புதிய, உதவாக்கரை வகுப்பினரை உருவாக்கி, சமூகக் கிளர்ச்சிகளும் அரசியல் கிளர்ச்சிகளும் முளைக்க வழி வகுக்கக்கூடும். அக்கிளர்ச்சிகளை எப்படிக் கையாள வேண்டும் என்பது தற்போது நடைமுறையில் உள்ள எந்தவொரு சித்தாந்தமும் அறியாத வகையானவையாக அவை இருக்கும். தொழில்நுட்பத்தையும் சித்தாந்தத்தையும் பற்றிய அனைத்துப் பேச்சும் தெளிவற்றதாகவும் நமக்குத் தொடர்பற்றதாகவும் தோன்றக்கூடும், ஆனால் பெரும்பான்மை மக்களுக்கு வேலையில்லாமல் போகக்கூடும் அல்லது தனக்கு வேலையில்லாமல் போகக்கூடும் என்ற உண்மையான சாத்தியக்கூறு அவர்கள் அனைவரும் அப்பேச்சின்மீது அக்கறை கொள்ளும்படி செய்கிறது.

## 2

## வேலை

# எதிர்காலத்தில் உங்களுக்கு எந்தவொரு வேலையும் இல்லாமல் போகலாம்

2050 ஆம் ஆண்டில் வேலை வாய்ப்புச் சந்தை எப்படி இருக்கும் என்பது பற்றி நமக்கு எந்த யோசனையும் இல்லை. இயந்திரக் கற்றலும் ரோபாட் அறிவியலும் தயிர் உற்பத்தியில் தொடங்கி யோகா கற்றுக் கொடுப்பதுவரை கிட்டத்தட்ட அனைத்து வேலைகளையும் மாற்றிவிடும் என்று பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது என்றாலும், மாற்றத்தின் தன்மை குறித்தும் அது எப்போது நிகழும் என்பது குறித்தும் ஒன்றுக்கொன்று முரண்பட்டக் கண்ணோட்டங்கள் உள்ளன. வெறும் பத்து அல்லது இருபது ஆண்டுகளுக்குள் அந்த மாற்றம் நிகழும் என்றும், கோடிக்கணக்கான மக்கள் பொருளாதாரரீதியாகத் தேவையற்றவர்களாக ஆகிவிடுவர் என்றும் சிலர் நம்புகின்றனர். மற்றவர்கள், நீண்டகால நோக்கில் பார்க்கும்போது தன்னியக்கமாக்கம் தொடர்ந்து புதிய வேலைகளை உருவாக்கிக் கொண்டிருக்கும் என்றும், எல்லோருக்கும் அதிகச் செழிப்பைக் கொண்டு வரும் என்றும் கருதுகின்றனர்.

அப்படியானால், அச்சுறுத்தக்கூடிய வகையிலான ஏதோ எழுச்சி நிகழவிருக்கிறதா? அல்லது, அப்படிப்பட்ட முன்னறிவிப்புகள், ‘லடைட்’ மனப்போக்கிற்கான இன்னோர் எடுத்துக்காட்டா? (லடைட் என்பது 19ம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆங்கிலேய ஆலைத் தொழிலாளர்களின் ஒரு இரகசிய அமைப்பு. ஆலைகளில் இயந்திரங்கள் பயன்படுத்தப்படுவதை எதிர்த்துப் போராடிய ஒரு புரட்சிக் குழுவினர் அவர்கள். தங்களுடைய வேலைகளை இயந்திரங்கள் எடுத்துக் கொண்டால், தங்கள் தொழிலைக் கற்பதற்குத் தாங்கள் செலவிட்ட நேரம் வீணாகிவிடும் என்று அவர்கள் பயந்தனர். இதனால் ஆலைகளில் இயந்திரங்கள் பயன்படுத்தப்படுவதை அவர்கள் கடுமையாக எதிர்த்தனர். லடைட் இயக்கம் இங்கிலாந்தில் நாட்டிங்கம் நகரில் தொடங்கி அப்பகுதி நெடுகிலும் பரவியது. இப்போராட்டம் 1811 ஆம் ஆண்டிலிருந்து 1816 ஆம் ஆண்டுவரை நீடித்தது. இறுதியில் அது சட்டத்தின்படியும் இராணுவத்தைக் கொண்டும் அடக்கி ஒடுக்கப்பட்டது. காலப்போக்கில், தொழில்மயமாக்கம், தன்னியக்கமாக்கம், கணினிமயமாக்கம், மற்றும் புதிய தொழில்நுட்பங்களை எதிர்க்கின்ற எவரொருவரையும் ‘லடைட்’ என்று

குறிப்பிடும் வழக்கம் உருவானது.) இதற்கு விடையளிப்பது கடினம். தன்னியக்கமாக்கம் பெருந்திரளான மக்கள் தங்கள் வேலையை இழப்பதற்கு வழி வகுக்கும் என்ற பயம் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே நிலவியது. ஆனால் அந்த பயம் இன்றுவரை மெய்யாகவில்லை. தொழில் புரட்சி தொடங்கியதிலிருந்து, ஓர் இயந்திரம் மனிதர்களிடமிருந்து பறித்துக் கொண்ட ஒவ்வொரு வேலைக்கும் குறைந்தபட்சம் ஒரே ஒரு புதிய வேலையாவது உருவாக்கப்பட்டது. சராசரி வாழ்க்கைத் தரம் குறிப்பிடத்தக்க அளவு அதிகரித்துள்ளது. ஆனாலும், இம்முறை நிலைமை வேறு மாதிரி இருக்கும் என்றும், இயந்திரக் கற்றல் உண்மையிலேயே ஒரு மிகப் பெரிய பாதிப்பை ஏற்படுத்தக்கூடிய ஒரு காரணியாக இருக்கும் என்றும் நினைப்பதற்கு நியாயமான காரணங்கள் இருக்கத்தான் செய்கின்றன.

உடல் திறன், அறிவுத் திறன் ஆகிய இரண்டு வகையான திறன்களை மனிதர்கள் பெற்றுள்ளனர். கடந்தகாலத்தில், முக்கியமாக உடல் திறன் விஷயத்தில்தான் இயந்திரங்கள் மனிதர்களோடு போட்டியிட்டன. அறிவுத் திறனைப் பொறுத்தவரை, மனிதர்கள் இயந்திரங்களைவிட மிக உயர்வான நிலையில் இருந்தனர். எனவே, வேளாண்மை, தொழில் துறை போன்றவற்றில் மனிதர்கள் செய்த வேலைகள் தன்னியக்கமாக்கப்பட்டபோது, புதிய சேவை வேலைகள் முளைத்தன. அறிவு சார்ந்த திறமைகள் அவற்றுக்குத் தேவைப்பட்டன. கற்றல், ஆய்வு செய்தல், தகவல்களைப் பரிமாறிக் கொள்ளுதல், முக்கியமாக உணர்ச்சிகளைப் புரிந்து கொள்ளுதல் போன்ற அத்திறமைகள் மனிதர்களிடம் மட்டுமே இருந்தன. ஆனாலும், மனித உணர்ச்சிகளைப் புரிந்து கொள்வதற்கான திறமை உட்பட இத்தகைய திறமைகளில் ஏராளமானவற்றில் செயற்கை நுண்ணறிவு மனிதர்களை

விஞ்சத் தொடங்கியுள்ளது. உடல் திறன், அறிவுத் திறன் ஆகிய இரண்டுக்கும் அப்பால், மனிதர்கள் எப்போதும் முன்னணியில் இருக்கின்ற மூன்றாவது திறன் எதுவும் இருப்பதாக நமக்குத் தெரியவில்லை.

செயற்கை நுண்ணறிவுப் புரட்சி என்பது கணினிகள் மேன்மேலும் வேகமாகச் செயல்படுவதையும் மேன்மேலும் அதிக சாமர்த்தியமானவையாக ஆவதையும் பற்றியது மட்டும் அல்ல என்பதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டியது இன்றியமையாதது. உயிரியலிலும் சமூக அறிவியலிலும் நிகழ்த்தப்பட்டுள்ள புதுமையான கண்டுபிடிப்புகள்

செயற்கை நுண்ணறிவுப் புரட்சிக்கு வலுவூட்டுகின்றன. மனித உணர்ச்சிகள், விருப்பங்கள், தேர்ந்தெடுப்புகள் ஆகியவற்றின் அடித்தளமாக இருக்கின்ற உயிர்வேதிச் செயல்முறைகளை நாம் எவ்வளவு அதிகச் சிறப்பாகப் புரிந்து கொள்கிறோமோ, மனித நடத்தையை ஆய்வு செய்வதிலும், மனிதத் தீர்மானங்களைக் கணிப்பதிலும், ஊர்தி ஓட்டுநர்கள், வங்கியாளர்கள், வழக்கறிஞர்கள் ஆகியோரின் இடங்களை எடுத்துக் கொள்வதிலும் கணினிகளால் அவ்வளவு அதிகச் சிறப்பானவையாக ஆக முடியும்.

நரம்பணுவியல் மற்றும் நடத்தைசார் பொருளியலில் கடந்த சில பத்தாண்டுகளாக நிகழ்த்தப்பட்டு வந்துள்ள ஆராய்ச்சிகள், மனிதர்களுக்குள் ஊடுருவிச் சென்று பார்ப்பதற்கு அறிவியலறிஞர்களுக்கு உதவியுள்ளன. குறிப்பாக, மனிதர்கள் எவ்வாறு தீர்மானங்களை மேற்கொள்கின்றனர் என்பதைப் பற்றிச் சிறப்பாகப் புரிந்து கொள்வதற்கு அந்த ஆராய்ச்சிகள் பெருமளவு உதவியுள்ளன. உணவில் தொடங்கி நம்முடைய வாழ்க்கைத்துணைவர்வரை எல்லாவற்றையும் நாம் சுயேச்சையாகத் தேர்ந்தெடுப்பதில்லை, மாறாக, கண்ணிமைக்கும் நேரத்தில் பல கோடிக்கணக்கான நரம்பணுக்கள் நிகழ்தகவுகளைக் கணக்கிடுவதிலிருந்துதான் நம்முடைய தேர்ந்தெடுப்புகள் முளைக்கின்றன என்பது இப்போது தெரிய வந்துள்ளது. நாம் எப்போதும் தற்பெருமையோடு குறிப்பிடும் 'மனித உள்ளுணர்வு' என்பது உண்மையில் ஏற்கனவே நிகழ்ந்துள்ளவற்றின் அடிப்படையில் 'விஷயங்களின் போக்கை உணர்ந்து கொள்ளுதல்'தானே தவிர வேறொன்றுமில்லை. நல்ல ஓட்டுநர்கள், வங்கியாளர்கள், வழக்கறிஞர்கள் ஆகியோர் போக்குவரத்தையும் முதலீட்டையும் பேரப்பேச்சையும் பற்றிய எந்த மாயாஜாலமான உள்ளுணர்வையும் பெற்றிருக்கவில்லை. மாறாக, அவர்கள் வெறுமனே விஷயங்கள் மீண்டும் மீண்டும் நிகழும் விதத்தைக் கூர்ந்து கவனிப்பதன் மூலம், கவனக்குறைவான பாதசாரிகளையும், எந்தத் தகுதியுமின்றிக் கடன் கேட்டு வருபவர்களையும், நேர்மையற்றவர்களையும் அடையாளம் கண்டுகொண்டு அவர்களைத் தவிர்த்துவிடுகின்றனர், அவ்வளவுதான். மனித மூளையின் உயிர்வேதிப் படிமுறைத் தீர்வுகள் கச்சிதமானவை அல்ல. கான்கிரீட் காடுகளாக மாறிப் போயுள்ள நகர்ப்புறங்களுக்கு ஏற்றவையாக அல்லாமல், ஆப்பிரிக்க வனாந்திர வாழ்க்கைக்கு மட்டுமே பொருத்தமாக இருந்த, காலாவதியாகிவிட்ட மூளை நரம்பணுத்

தொடர்புகள், குறுக்குவழிகள் போன்றவற்றை அவை சார்ந்துள்ளன. திறமையான ஓட்டுநர்களும் வங்கியாளர்களும் வழக்கறிஞர்களும்கூடச் சில சமயங்களில் முட்டாள்தனமான தவறுகளைச் செய்வதில் வியப்பேதும் இல்லை.

அப்படியானால், ‘உள்ளுணர்வு’ இன்றியமையாததாக இருப்பதாகக் கூறப்படுகின்ற வேலைகளில்கூடச் செயற்கை நுண்ணறிவால் மனிதர்களை விஞ்சி நிற்க முடியும் என்று இதற்கு அர்த்தமாகிறது. உள்ளுணர்வுரீதியான அனுமானங்கள் விஷயத்தில் செயற்கை நுண்ணறிவு மனித ஆன்மாவோடு போட்டியிட வேண்டியிருக்கும் என்று நீங்கள் நினைத்தால், அது சாத்தியமற்றதுபோலத் தோன்றும். ஆனால், நிகழ்தகவுகளைக் கணக்கிடுவதிலும் விஷயங்களின் போக்கைக் கண்டுகொள்வதிலும் செயற்கை நுண்ணறிவு மனித மூளையின் நரம்புப் பின்னலமைப்புகளுடன் மட்டும் போட்டியிட வேண்டியிருக்கும் என்றால், அது அவ்வளவு கடினமானதாக இருக்காது.